# இஸ்லாமிய சட்டங்கள் மற்றும் அதன் சிறப்பியல்புகள்

## பற்றிய ஆய்வுக் கட்டுரை

## Speciality of Islamic Law

மவ்லவி அபூ நதா M.J.M. ரிஸ்வான் மதனி

www.islamkalvi.com

# முன்னுரை

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ் ஒருவனுக்கே புகழ் அனைத்தும் சொந்தமானது. அவனது அருளும் சாந்தியும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மீதும், அவர்களின் வழி நடக்கும் அனைவரும் மீதும் உண்டாகட்டுமாக!

இஸ்லாம் உலகியல் இறை மார்க்கமாகப் பிரகடணப்படுத்தப்பட்டுள்ளது. அதன் சட்டங்கள், நடைமுறைகள் என்பன மனிதர்களின் நிலை பற்றி நன்கறிந்த இறைவனால் வகுக்கப்பட்டதாகும்.

இறையியற் சட்டங்கள் எல்லாக் காலத்திற்கும், சமூகத்திற்கும், தேசத்திற்கும், பொருந்தும் வகையில் அமைந்திருப்பதுடன், அவை சர்வதேசத்தன்மை வாய்ந்தவையாகவும் இருப்பது அதன் சிறப்பம்சமாகும்.

கறுப்பர், வெள்ளையர், மேல்சாதி, தீண்டத்தகாதோர், படித்தவர், பாமரர் என அனைத்து சாராரும் ஏற்றுக்கொள்ளும் வகையில் அமைந்திருப்பது இஸ்லாமிய சட்டத்தின் மற்றொரு சிறப்பம்சம் எனலாம்.

மனித சட்டங்கள் காலத்திற்கு காலம் மாறுபடும் தன்மையைக் கொண்டதாகவும், பல குறைபாடுகளையும் உள்ளடக்கியதாகவும் அமைந்துள்ளன என்பது இஸ்லாத்தின் தெளிவான நிலைப்பாடாகும்.

மனித சட்டங்களை இயற்றியவர்கள் மனிதர்களாக இருக்கின்ற காரணத்தினால் அவற்றில் பல குறைபாடுகள் காணப்படுவது மாத்திரமின்றி, ஆளும் வர்க்கத்தின் அதிகாரம், ஆதிக்கம், மேலாண்மை, செல்வாக்கு போன்ற இன்னோரென்ன அம்சங்களை பாதுகாக்கும் நோக்கங்கள் கொண்டவையாயகவும் அவை இயற்றப்பட்டிக்கின்றன என்ற முடிவினை மனித சட்டங்கள் பிறந்த ஆய்வுகள் மூலம் தெரிய வருகின்றது.

நமது இந்த ஆய்வில் இஸ்லாமிய சட்டம் என்றால் என்ன? அதன் சிறப்பியல்புல்கள் யாது? ஏனைய சட்டங்களுக்கும் இஸ்லாமிய சட்டங்களுக்கும் இடையலான ஒற்றுமை, வேற்றுமைகள் முதலிய அம்சங்கள் போன்றவற்றில் சுருக்கமானதொரு பார்வை இங்கு முன்வைக்கப்படுகின்றது. இந்த ஆய்வானது பின்வரும் தலைப்புக்களில் பேசுகின்றது.

1- **சட்டத்தின் வரைவிலக்கணம். அதன் வகைகளும்.**
2- **சட்டத்தின் தேவையும் அவசியமும்**
3- **சட்டம் இயற்றும் அதிகாரம் அல்லாஹ்வுக்குச் சொந்தமானது .**
4- **சட்டம் இயற்ற மனிதன் தகுதி பெற்றவனா?**
5- **இஸ்லாமிய சட்டத்துறை பற்றிய வரலாற்றுப் பார்வை,**
6- **இஸ்லாமிய சட்டத்துறையின் அடிப்படைகள்,**
7- **இஸ்லாமிய சட்டத்துறையில் காணப்படுகின்ற சிறப்பம்சங்கள்,**

8- **இஸ்லாமிய சட்டங்களும், முஸ்லிம் கலீ:பாக்களும்**

9- **மேற்கத்தய சட்டங்களில் காணப்படும் குறைபாடுகள் ஆகிய முக்கிய தலைப்புக்களில் பேசப்படவிருக்கின்றன.**

அல்லாஹ் அதற்கான அறிவையும், தேக ஆரோக்கியத்தையும் தந்தருள்வானாக ஆமீன்.

# சட்டத்தின் வரைவிலக்கணம்

**இஸ்லாமிய சட்ட யாப்பின் தன்மை பற்றி விளங்குவதற்காக இங்கு சட்டத்தின் வரைவிலக்கணம் பற்றியும், சட்டம் பற்றியும் நோக்கப்படுகின்றது.**

## சட்டம் தொடர்பான மொழி விளக்கம்:

**அரபியில் சட்டத்தைக் குறிக்க கானூன்** (قانون) என்று கூறப்படும். ஆரம்பத்தில் இந்தச் சொல் இலத்தீன் மொழியில் kanun كانون என அழைக்கப்பட்டது. இதன் பொருள் வளைவில்லாத, நேரான தடி என்பதாகும். பின்னர் இது பாரஸீக மொழியில் ஒவ்வொரு பொருளின் அடிப்படையைக் குறிக்கப் பயன்படுத்தப்படும் كانون கானூன் என்ற சொல்லில் அழைக்கப்பட்டது. அதன் பின்னர்,

பாரஸீகத்தில் இருந்து, அரபி மொழிக்கு மொழியில் சட்டம், ஒழுங்கமைப்பு என பொருள்படும் قانونகானூன் என்ற சொல்லாக மொழி மாற்றம் செய்யப்பட்டது. இப்போது ‘நிலையான அடிப்படைகள் மீது கட்டி எழுப்பப்பட்டு, பணிந்து நடக்கும் ஒழுங்கமைப்பிற்கு قانون கானூன்’’ என அழைக்கப்படுகின்றது. (1)

அரபி மொழிக்கு மொழிமாற்றம் செய்யப்பட்ட ஒரு சொல்லாகும். சகல பகுதிகளையும் உள்ளடக்கிய ஒரு அம்சத்தை அதுக்குறிக்கும். ...Canon என்பது எழுதப்பட்ட ஒழுங்கமைப்பாகும். அதை அரசு அமுல் செய்யும் மக்கள் அதற்கு .Law எனப் பெரிட்டு அழைப்பார்கள். (2)

**நடைமுறை வழக்கில்:** சமூகத்தில் வாழ்கின்ற தனிமனிதர்ளை கட்டமைக்கப்பட்ட ஒழுங்கமைப்பின் கீழ் கொண்டுவருவதற்காக இயற்றப்பட்டுள்ள ஒரு முறை. அதை மீறலாகாது, அவ்வாறு அதை மீறுவோர் தண்டிக்கப்படுவர் என்ற வரையறைகளைத் தாங்கிய விதிகளைக் குறிக்கப் பயன்படுத்தப்படுகின்றது.

சர்வதேச அரபுக்கலை களஞ்சியம் என்ற நூலில்: சட்டம் என்பது குறிப்பட்டதொரு சமூகத்தைப் ஒழுங்கமைக்கின்ற அடிப்படைவிதிகள் சட்டம் என விளக்கம் தரப்படுகின்றது. இந்த சட்டம் சமூக அரசியல் சார்ந்த ஒழுங்கமைப்புக்களில் ஒன்றாகவும் கொள்ளப்படுகின்றது என்றும் குறிப்பிட முடியும். (3)

## இஸ்லாமிய சட்ட யாப்பிற்கான வரைவிலக்கணம்:

அல்குர்ஆன், அஸ்ஸுன்னாவில் இருந்து பெறப்பட்ட பிரதான அடிப்படை அம்சங்கள், சட்டவிதிகள், பொதுச் சட்டங்கள் ஆகியவற்றிருந்து சட்டத்தை ஒழுங்கமைதற்காகப் பெறப்படுகின்ற ஒட்டுமொத்தமான சட்டங்களை இஸ்லாமிய சட்டக்கோவை என வரையறைந செய்யப்படுகின்றது. (4)

**விளக்கம்:** இஸ்லாமிய சட்டம் என்பது காலத்தால் அழியாதது, மாற்றத்திற்கும் மாறுதலுக்கும் அப்பாற்பட்டது, அதை பாழடிக்க முடியாது. மனித சட்டங்களுக்கும், சிந்தனைகளுக்கும் அந்த சட்டத்தில் இடமில்லை. ஏனெனில் அது அல்லாஹ்விடம் இருந்து வந்துள்ள இறைச் செய்தி என்பதும், மாற்றத்திற்கு உடன்பட முடியாதது என்பதும் இஸ்லாத்தின் நிலைப்பாடாகும்.

இதை நிலையானது என்றும், கருத்தொருமித்தலின் பின் நெகிழும் தன்மை கொண்டது என்றும் இரண்டாக வகுப்பார்கள்.

---------------------------

1–الإسلام والدستورص (8/1) للمؤلف : توفيق بن عبد العزيز السديري الطبعة : الأولى . الناشر : وكالة المطبوعات والبحث العلمي وزارة الشئون الإسلامية والأوقاف والدعوة والإرشاد تاريخ النشر : 1425هـ المكتبة الشاملة

2– معجم لغة الفقهاء – (ج 1 / ص 355)

3– الموسوعة العربية العالمية – (1 / 3) المكتبة الشاملة

4 –الإسلام والدستورص (8/1) للمؤلف : توفيق بن عبد العزيز السديري

அல்குர்ஆனிலும், அஸ்ஸுன்னாவிலும் இரு கருத்திற்கு இடமில்லாதவாறு கூறப்பட்டவைகளை **‘*நிலையானது என்றும் நிலையானதே*”** என்ற பொது விதியின் அடிப்படையில் மாற்றதத்திற்கு அப்பாற்பட்டது என்பார்கள். உதாரணமாக இஸ்லாமிய நாட்டின் சட்டங்களை ஜனநாயக சட்டமாக மாற்றுதல் போன்ற வழிமுறை இஸ்லாமிய சட்டத்தில் நிராகரிக்கப்பட்டதாகும்.

***இஜ்திஹாத்,*** மற்றும் ஷுரா அடிப்படையில் பெறப்படும் சட்டங்களை நெகிழ்விற்கு உட்பட்ட தன்மை கொண்ட சட்டங்கள் என்றும் இருவயையாக நோக்கப்படும். இது பிக்ஹ், மற்றும் நிருவாகத்துறையுடன் துறையுடன் தொடர்புபட்டதாகும்.

பிரபல அறிஞர் அமுஹம்மத் அமீன் ஷன்கீதி என்பவர் சட்டத்தை நிருவாகம் சார்ந்த சட்டம், மார்க்கம் சார்ந்த சட்டம் என சட்டத்தை இரண்டாக நோக்குகின்றார்கள். உமர் (ரழி) அவர்களின் ஆட்சியில் மேற்கொள்ளப்பட்ட நிருவாக சீர்த்தங்கள் சிலதை இதற்கு உதாணரமாக் குறிப்பிடுகின்றார்கள். படைகளின் பெயர்களைப் பதிவு செய்தமை, மக்காவில் இருந்த ஸப்வான் பின் உமைய்யாவின் வீட்டை வாங்கி சிறைச்சாலை அமைத்தமை, அரச தொழிலாளர்களுக்கு தனியான காரியாலயங்கள் அமைத்து செயற்பட்டமை போன்ற அம்சங்கள் இதில் உள்ளடங்கும். இது மனித சட்டங்களுடன் தொடர்புடையதாக இருப்பினும், இஸ்லாமிய அடிப்படைக்கு முரண்படாத காரணத்தால் அது அங்கீகாரம் பெறுகின்றது. (1)

வாரிசுரிமையில் ஆண்களின் பங்கில் சரிபாதி பெண்களுக்கு வழங்கப்படுவது, பெண்களை தலாக் விடுவது, கல்லெறிந்து கொல்வது, பலதாரம் மணம் போன்ற மார்க்க சட்டங்கள் அநீதியானது எனக் **கூறுவதை** இஸ்லாம் அங்கீகரிப்பதில்லை.

ஆரம்பகால இஸ்லாமிய ஆய்வாளர்கள் இந்தச் சொல்லாடலை விட السير **அல்லது** **السياسة الشرعية** போன்ற சொற்பிரயோகங்களையே சிறப்பனாதாகக் கருதுகின்றனர். இதை இமாம் இப்னு தைமிய்யா அவர்கள் ஒன்றினையும் இஸ்லாமிய சட்டம் பற்றிப் பேசுகின்ற நூலுக்கு

**السياسة الشرعية என்றும், இமாம் முஹம்மத் பின் ஹஸன் அஷ்ஷைபானி என்பவர்** السير الكبير/ السير **என தலைப்பிட்டு** இஸ்லாமிய சட்டங்கள் பற்றி ஆய்வுகள் செய்துள்ளதைப் பார்க்கின்றோம்.

இது பற்றி ஆய்வு செய்த இஸ்லாமிய ஆய்வாளர்கள் /المعاهدت / الوثائق ஆவணங்கள், உடன்படிக்கைகள் போன்ற தலைப்புக்களில் ஆய்வுகள் மேற்கொண்டுள்ளார்கள்.

### சட்டத்தின் அவசியமும் தேவையும்.

இயல்பாகவே மனிதன் சமூகப்பிரயாணியாகும். எனவே அவன், ஒன்று சேர்ந்து வாழ்கின்ற ஒரு சமூக அமைப்பு அவசியமாகும் என்று வாழ்வியல் அறிஞர்கள் குறிப்பிடுகின்றார்கள். (2)

மனிதன் உயரிய நோக்கில் படைக்கப்பட்டிருக்கின்றான், பண்பாடு, நாகரீகம் இங்கிதங்கள் போன்ற உயர் பண்புகளால் அவன் உயர் நிலையை அடைகின்றான். அவன் தனது நோக்கங்களை நிறைவு செய்ய சட்டங்கள் பாரிய பங்காற்றுகின்றன. அவன் இப்பூமியில் அல்லாஹ்வின் பிரதி என்றும் கூட இஸ்லாம் குறிப்பிடுகின்றது.

ஆகவே, அவன், தவறுகள் செய்கின்ற போது அவனைத் தண்டிக்கின்ற உரிமையும், அவனுக்கு அநீதி இழைக்கப்படுகின்ற போது நீதி பெற்றுத்தரப்படுவதும் நீதியை நிலைநாட்டிடவும் அது பெரும் உதவியாக இருக்கின்றன.

இதற்கு உதாரணமாக நபித்துவக் காலத்திற்கு முன்னர் வாழ்ந்த மக்காவாழ் மக்களால் நிறுவப்பட்ட 'ஹில்புல் ஃபுழூல்' (3) என்ற அமைப்பைக் குறிப்பிட்டுக்காட்ட முடியும். முஹம்மத் நபி (ஸல்) அவர்களும் இதில் ஒரு அங்கத்தவராக இருந்துள்ளார்கள்.

--------------------------------

**–1–** أضواء البيان للشنقيطي (3/ 328)

**– 2–** نقلا من كتاب " الإسلام والدستورص (8/1) للمؤلف : توفيق بن عبد العزيز السديري

**–3–** الكامل في التاريخ – ذكر حلف الفضول (ج 1 / ص 251 )

إنّ الفضول تحالفوا وتعاقدوا ... ألاّ يقرّ ببطن مكّة ظالم

பள்கள் ஒன்றினைந்து உடன்படிக்கை செய்துள்ளனர், - மக்காவில் அநியாயக்காரனுக்கு இடமில்லை என்பதாக!

இது அவர்கள் தமக்குள் செய்து கொண்ட உடன்படிக்கொண்டது, உறுதி மொழிபூண்டதுமாகும்- அண்டைவீட்டாரும் தூதரத் தேசத்தரவும் பாதுகாப்புப் பெறுவர் என்று. இவ்வாறு அவர்களின் உறுதி மொழி பற்றிக் கூறப்படுகின்றது. (1)

மக்காவிற்கு வருவை தரும் வெளிப்புற மக்களுக்கு பாதுகாப்பளிப்பதும், அங்கு ஒருவருக்கு அநீதி இழைக்கப்படுகின்ற போது அவருக்கு நீதி பெற்றுத்தருவதும் அதன் பிரதான நோக்கங்களில் ஒன்றாக ஈர்த்துள்ளது.

ஒரு சமூகத்தில் எழுகின்ற பிரச்சினைகளுக்கு குறிப்பிட்ட சாரார் சட்டத்தை கையில் எடுத்துக் கொண்டு, சட்டத்தின் ஒழுங்கு, மற்றும் வரம்புவிதிகளைப் பேணாது தன்னிச்சையாக செயல்படுவது சமூகத்தில் வேண்டப்படாத பாரிய பின்விளவுகளை தோற்றுவிக்கும்.

குற்றம் செய்கின்றவரை தண்டிக்கின்ற வழிமுறையை தனிமனிதன் கையில் எடுப்பது பாரிய சிக்கல்களைத் தோற்றுவிக்கும். இதில் தவறு செய்தவர் தண்டிக்கப்பட வேண்டும் என்பதற்காக ஒருவர் அதிகாரத்தைப் பிரயோகிப்பது தவறானதாகும்.

எனவேதான் அதற்காக ஒழுங்கமைக்கப்பட்ட, மனிதர்கள் ஏற்றுக்கொள்கின்ற மனிதாபிமானத்துடன் கூடிய ஒழுங்குகளைக் கொண்ட, சகல மக்களுக்கும் பொருத்தமான, எல்லாக்காலத்திற்கும் இசைவான ஒரு சட்டம் சமூகத்திற்கு இன்றி அமையாததாகும்.

ஆரம்ப காலங்களில் வாழ்ந்த மனிதர்கள் கோத்திரவாரியாக வாழ்ந்ததால் தங்களுக்கென ஒரு தலைவரை தமது கோத்திரங்களில் இருந்தே தெரி செய்யும் வழக்கம் இருந்தது. அவர்கள் தமக்குள் ஏற்படுகின்ற பிரச்சினைகளுக்கு தங்கள் தலைமையை நாடி தீர்வை வேண்டுவர்.

இந்த நடைமுறை அக்காலத்தில் வாழ்ந்த மனிதர்களுக்கு பொருத்தமான நடைமுறைதான் என்று ஏற்றுக் கொண்டாலும் பல நூறு கோடிகளைத் தாண்டிய உலகியல் அமைப்பில் இது அசாத்தியமானதாகும். இங்குதான் சட்டத்தின் தேவையும், சட்டத்தை நடைமுறைப்படுத்துகின்ற அரசும், அதன் அவசியமும் உணரப்படுகின்றது.

அந்த சட்டமானது, சகல தரப்பு மனிதர்களும் நடைமுறைப்படுத்திட சாத்தியமானதாகவும், விமர்சனங்களுக்கும், குற்றச்சாட்டுகளுக்கும் அப்பாற்பட்டதாகவும், சாகாவரம் பெற்றதாகவும் அமைதல் வேண்டும். மனித சட்டங்களை இயற்றும் நாடுகள் கூட தமது சட்டங்கள்தான் உலகில் உயிர்வாழ வேண்டும், பிறநாடுகள் அனைத்தும் அதையே சட்டமாகக் கொள்ளவேண்டும் என்ற நிலையில் குறைபாடுகளின் சங்கமமாக இருக்கின்ற தமது சட்டத்தை பின்பற்றிட கட்டாயப்படுத்துவது சட்டத்தின் அவசியத்தை உணர்த்தித்தான் என்பதைப் புரியலாம்.

நம்பிக்கை கொண்டோரே! நீங்கள் உடன்படிக்கைகளை (முழுமையாக) நிறைவேற்றுங்கள்.(2) என்ற இறைமறை வசனம் வர்த்தகம், போர், சமாதான உடன்படிக்கை போன்ற சகல காரியங்களிலும் சட்டங்களைப் மதிக்கின்ற பிரஜைகளை இஸ்லாம் வேண்டி நிற்கின்றது என்பதை இது உணர்த்தி நிற்கின்றது.

இது ஆயிரத்தி நாநூறு ஆண்டுகளுக்கு முன்னால் இறக்கப்பட்ட இறைமறையின் வழிகாட்டலாகும்

-------------------------------------------

1- الكامل في التاريخ - (ج 1 / ص 251) ذكر حلف الفضول .

2- سورة المائدة . آية -1

## சட்டம் இயற்றும் அதிகாரம் அல்லாஹ்வுக்குச் சொந்தமானது.

மனித செயல்களின் விளைவுகள், நன்மை தீமை, சாதக பாதகங்களின் விளைவாக உருவாக்கப்படுவதே மனித சட்டங்களின் இரகசியமாகும்.

மனித சட்டங்கள் மனிதர்களால் உருவாக்கப்படுகின்ற காரணத்தால் அது தன்னகத்தே பல குறைபாடுகளைக் கொண்டதாக இருக்கும். உதாரணமாக திருட்டு, கொலை, புகைத்தல், மது, விபச்சாரம், பாலியல் போன்ற வழக்குகளுடன் தொடர்புடைய சட்டங்களைக் குறிப்பிட முடியும்.

இதைத் தடுப்பதற்காக அரசுகளால் கொண்டுவரப்படும் சட்டம் ஒருவனைத் திருத்துவதற்குப் பதிலாக அவனை தேர்ந்த திருடனாக, கொலை காரணாக மாற்றுகின்றது. ஒரு முறை திருடியவன் பல தடவைகள் திருடுகின்றான், ஒரு கொலை செய்தவன் பல கொலைகள் புரிகின்றான் என நாளேடுகளில் படிக்கின்றோம்.

திருடனின் கரம் மணிக்கட்டுவரை துண்டிக்கப்படுவது, கொலைக்குப் பதிலாக கொலையாளி கொலை செய்யப்பட வேண்டும் என்ற சட்டங்கள் இரக்கமற்ற, காட்டுமிராண்டித்தனமான சட்டம் என விமர்சனம் செய்யும் பலர் தமது வீடுகளின் திருடிய திருடனை மூர்க்கத்தனமாக தாக்கி சிலவேளை அவனைக் கொலையும் செய்தும் விடுகின்றனர். கொலை காரணை இவர்கள் என்ன செய்யவார்கள் என்று நினைத்துப்பார்க்க வேண்டும்.

ஒரு சட்டம் அமுலுக்கு வருகின்றது என்றால் அது விமர்சனத்திற்கு அப்பாற்பட்டதாகவும், எல்லாக்காலத்திற்கும் பொருத்தமானமதாகவும், பூரணம் பெற்றதாகவும் இருப்பது அவசியமாகும். மட்டுமின்றி அவ்வாறு அமைந்திருப்பது அதன் சிறப்பியல்புகளைப் பறைவாட்டுவதாய் அமையும்.

ஆகவேதான் இஸ்லாம், அதன் சட்டவாக்கத்தில் மனிதர்களை தொடர்புபடுத்திப் பேசவுமில்லை, அதற்கு மனிதர்களின் சட்டம் தேவையுமில்லை.

அதற்கு மாற்றமாக உலகத்தைப் படைத்த, மனிதர்களின் பலம், பலவீனம் ஆகிய நிலைகள் பற்றி பூரணமாகவும், நன்றாகவும் அறிந்தவனாகிய அல்லாஹ்தான் அதற்குத் தகுதியும், அதிகாரமும் மிக்கவன் என அடித்துக் குறிப்பிடுகின்றது.

அந்த வகையில் சகலவிதமான பிரச்சினைகளுக்கும் தன்னிடம் முழுமையானதும், மக்கள் ஏற்றுக் கொள்கின்றதுமான தீர்வு உண்டு. பகுத்தறிவு, கோட்பாடுகள், மனித சட்டங்கள், பிரதேச, சர்வதேச ஒப்பந்தங்கள் எதுவானாலும் அதற்கு அல்லாஹ்வின் வேதமான அல்குர்ஆன் என்ற மூல நூலில் இருந்தும் அதற்கான தீர்வை எட்ட முடியும் குறிப்பிடுகின்றது.

[57 : الأنعام] إِنِ الْحُكْمُ إِلَّا لِلَّهِ சட்டம் இயற்றும் அதிகாரம் அல்லாஹ்வுக்கே உரித்தானது. (1)

[26 : الكهف] وَلَا يُشْرِكُ فِي حُكْمِهِ أَحَدًا அவனது தீர்ப்பில் யாரையும் அவன் இணையாக்கிக் கொள்ளமாட்டான் . (2)

[ 50 : المائدة] أَفَحُكْمَ الْجَاهِلِيَّةِ يَبْغُونَ وَمَنْ أَحْسَنُ مِنَ اللَّهِ حُكْمًا لِقَوْمٍ يُوقِنُونَ ஜாஹிலிய்யா- அறியாமைக்கால தீர்ப்பையா அவர்கள் விரும்புகின்றனர், அல்லாஹ்விடம் அழகிய சட்டத்தீர்ப்பு தருபவன் யார் (3) போன்ற அல்குர்ஆனிய வசனங்கள் ஊடாக அல்லாஹ்வே சட்டம் இயற்றிட அதிகாரமும், தகுதியும் பெற்றவன் என அல்குர்ஆன் தெளிவுபடுத்துகின்றது.

حكم தீர்ப்பு, சட்டம், يحكمون தீர்ப்பளிப்பார்கள் போன்ற சொற்றொடர்கள் அல்குர்ஆனில் பல இடங்களில் இடம் பெற்றிருப்பது சட்டம் இயற்றும் அதிகாரம் அல்லாஹ்வுக்கு மாத்திரம உரிய பண்பு என்பதை எடுத்துக்காட்டவே என்பதை குர்ஆனிய ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றார்கள்.

----------------------------------

1- அல்அன்ஆம். 57-வது வசனம்.
2- அல்கஹ்ஃப். 26-வது வசனம்.
3- அல்மாயிதா. 50 வது வசனம்.

வலுவான இந்த சட்டவிதியின் அடிப்படையில் மனிதர்கள் தாமே சட்டங்களையும், ஒழுங்குகளையும் இயற்றுபவரகளாக இருக்கமுடியாது. ஏனெனில் அது ஒரு புறத்தில் இறையியற் கோட்பாட்டை உதாசீப்படுத்துவதாகவும், மறுபுறத்தில் மனித சட்டங்களில் இறையியத் தன்மையை வழங்குவதாகவும் அமைந்துவிடும். இது தெளிவான இறை நிராரிப்பாகும் என **ஷஹீத் செய்யித் குத்ப்** என்ற அறிஞர் குறிப்பிட்டுள்ளார். (1)

இந்த விதியின் அடிப்படையில் இஸ்லாமிய சட்டம் அதன் அடிப்படையிலேயே ஏனைய மனித சட்டங்களில் இருந்து முற்றிலும் வேறுபடுவதை அவதானிக்க கூடிதாக இருக்கின்றது. ஏனெனில் அது (இஸ்லாம்) சட்டம் இயற்றும் அதிகாரத்தை இணைதுணையற்ற ஏக இறைவனுக்குரியதாக ஏற்றுக் கொள்கின்றது.

மனித சட்டங்களை நடைமுறைப்படுத்துவது பற்றி இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள் இவ்வாறு குறிப்பிடுகின்றார்கள்.

قال الحافظ ابن كثير رحمه الله في كتاب "البداية والنهاية" لما تكلم عن الياسق وهو جنكيز خان , قال ابن كثير : فمن حكم بالشرائع المنسوخة من اليهودية والنصرانية فهو كافر, فكيف بمن حكم بشرائع البشر وأنظمتهم وقوانينهم؟ هذا لا شك في كفره بإجماع المسلمين, **دروس للشيخ سلمان العودة –** (138 / 53)

*மாற்றப்பட்ட வேதமாக இஸ்லாம் குறிப்பிடுகின்ற யூத, கிரிஸ்வத வேதங்கைளையே பின்பற்றுபவன் இறை நிராகரிப்பாளன் என்றால் மனித சட்டங்களையும், ஒழுங்குகளையும், கோட்பாடுகளையும் பின்பற்றுபவனின் நிலை எப்படிப்பட்டதாக இருக்கும்? இது வடிகட்டிய இறை நிரகாரிப்பு என்பது ஒட்டு மொத்த முஸ்லிம்களினதும் நிலைப்பாடாகும் என்பதை பிரபல இஸ்லாமிய அறிஞரான ஸல்மானுல் அவ்தா என்பவர் இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்களின் நூலில் இருந்து குறிப்பிடுகின்றார். (2)*

சட்டம் இயற்றும் அதிகாரம் பற்றிக் குறிப்பிடும் மற்றொரு அறிஞரான இமாம் கஸ்ஸாலி என்பவர் இவ்வாறு குறிப்பிடுகின்றார்கள்:

**وَفِي الْبَحْثِ عَنْ الْحَاكِمِ يَتَبَيَّنُ أَنْ لَا حُكْمَ إلَّا لِلَّهِ وَأَنَّهُ لَا حُكْمَ لِلرَّسُولِ وَلَا لِلسَّيِّدِ عَلَى الْعَبْدِ وَلَا لِمَخْلُوقٍ عَلَى مَخْلُوقٍ ، بَلْ كُلُّ ذَلِكَ حُكْمُ اللَّهِ تَعَالَى وَوَضْعُهُ لَا حُكْمَ لِغَيْرِهِ**

சட்டம் இயற்றும் அதிகாரி பற்றி ஆய்வு செய்கின்ற போது, அல்லாஹ்வுக்கே சட்டம் இயற்றும் முழுமையான அதிகாரம் உண்டு என்பது தெளிவகின்றது. இறைத்தூதரருக்கோ, அடிமைகளுக்கு எதிராக எஜமானர்களோ, ஒரு மனிதன் இன்னொரு மனிதனுக்கு எதிராகவோ சட்டம் இயற்றும் அதிகாரம் வழங்கப்படவில்லை. சட்டம் என்பது இறைக்கோட்பாட்டுடன், சட்டத்துனும் தொடர்புடையதாகும். மனித சட்டங்களுக்கு இஸ்லாமிய சட்டத்தில் இடம் தரப்படவில்லை. (பெரிய பந்தியின் சுருக்கம்) (3)

மக்கள் ஆட்சியும், அதிகாரமும் வழங்கப்பட்ட ஆட்சியாளர்கள்தாம் அதை நடைமுறைப்படுத்த தகுதி பெற்றுள்ளனர். அவர் இறைச்சட்டத்தையே இந்த மக்கள் மீது நடைமுறைப்படுத்த வேண்டும் அவரது சட்டத்தை அல்ல. அதை அடிப்படையாகக் கொண்டு இஸ்லாமிய சட்டத்தை நிறைவேற்றும் அதிகாரிகளுக்குக் கட்டுப்படுவது இறைவனுக்கு கட்டுப்பட்டதாகக் கொள்ளப்படுகின்றது என இஸ்லாமிய சட்டவியல் பற்றிய ஆய்வாளர்களில் ஒருவரான அபூஸஹ்ரா என்பவர் குறிப்பிடுகின்றார். (4)

-------------------------------

**1– العدالة في نظام الحكم في الاسلام (1 / 2) تأليف الدكتور محمد عبد الغني نقلا من كتاب : العَدالَة الاجْتِمَاعِيَّة في الإسلام للشهيد سيد قطب، ص(104).**

**2– دروس للشيخ سلمان العودة – (138 / 53) المكتبة الشاملة– الإصدار الخامس**

**3– المستصفى للغزالي (المستصفى – (1 / 13) المكتبة الشاملة – الإصدار الثالث**

**4– أبو زهرة . أصول الفقه ص . (63) المكتبة الشاملة – الإصدار الثالث**

فَاحْكُمْ بَيْنَهُمْ بِمَا أَنْزَلَ اللَّهُ وَلَا تَتَّبِعْ أَهْوَاءَهُمْ عَمَّا جَاءَكَ مِنَ الْحَقِّ [المائدة : 48] **‘நபியே அவர்கள் மத்தியில் அல்லாஹ் இறக்கியதைக் கொண்டு தீர்ப்பளிப்பீராக, உம்மிடம் வந்த சத்தியத்தை விட்டும் அவர்களது மனோ இச்சையை நீர் பின்பற்ற வேண்டாம் ”! (1)** என்ற குர்ஆனிய வசத்தின **அடிப்படையில் அமைந்த பல வசனங்கள்** சட்ட இயற்றுபவன் கண்ணியமும், மகத்துவமும் நிறைந்த அல்லாஹ்தான் என்பது இஸ்லாத்தின் மாறாத நிலைப்பாடாகும்.

எனவே அல்லாஹ்விடம் இருந்துதான் சட்டம் பிறக்க வேண்டும் என்பது இஸ்லாமிய ஷரீஆவின் உறுதியான நிலைப்பாடாகும். எனவே, இஸ்லாமிய சட்டத்தில் மனிதர்கள் எவ்வித தலையீடும் செய்யமுடியாது. அதன் முழுமையான அதிகாரம் அல்லாஹ்விற்கு மாத்திரம் உரியதாகும்.

## சட்டம் இயற்ற மனிதன் தகுதி பெற்றவனா?

மனிதனைப்படைத்த அல்லாஹ்வை **‘*ரப்*”** படைத்துப்பரிபாலித்துப் பக்குப்படுத்தி வளர்ப்பவன் என்ற பரந்த பொருள் படும் சொற்றொடர் கொண்டு அல்குர்ஆன் அல்லாஹ்வை அழைப்பதன் மூலம் மனிதன் பற்றி முழுமையாக அறிந்தவனும் அந்த அல்லாஹ்வே!

அவன் மனிதனுக்கு எது நன்மை, தீமை என்று அவன் விதித்துள்ளதை அவன் அறிந்தே விதித்துள்ளான். அவனே, கால, சூழலுக்கு உகந்ததாக சட்டத்தினையும் அமைத்துள்ளான். அவற்றை மனிதர்கள் மாற்றி அமைப்பதோ, அல்லது தாமாக சட்டங்கள் இயற்றிச் செயல்படுவதோ மனித குல மேம்பாட்டிற்கு உகந்தது என்று கூற முடியாது.

இதற்கு உலகில் தோன்றி மறைந்துள்ள பொதுஉடமைப் பொருளாதாரம், (மார்க்கிஸிஸம், டார்வினிஸம்) மறைந்து கொண்டிருக்கும் முலாளித்துவம், ஜனநாயகம், மதச்சார்பின்னை போன்ற கொள்கைகளை மாதிரிகளாகக் குறிப்பிட முடியும்.

இவற்றில் சிலரின் சிந்தனையில் பட்டது சட்டமாகப் பிரகடனப்படுத்தப்படும். அல்லது மக்கள் சட்ட வல்லுனர்களாகவும், அரசு சட்டத்தை நடைமுறைப்படுத்துவதாகவும் உறுதி மொழி தரப்படும்.

இன்னொரு விதமாகக் கூறுவதானால், மக்களின் வாக்கு வங்கிகள் ஊடாக மக்களை ஆள்வது என்ற பெயரில் அடிமைகளாக வைத்திருத்தல் எனலாம். மக்கள் எதை சட்டமாகக் கொள்கின்றார்களோ அவை சட்டமாகும். மக்கள் விரும்பாததும், சில போது நாட்டின் தலைவர் விரும்பாதததும் சட்டாமாகாது. அது மனித இயல்புக்குப் புறம்பானதாகவும், உரிமைகள் மீறப்படுவதாக விமர்சிக்கப்பட்டாலும் சரியே!

இஸ்லாமிய ஷரீஆ சட்டத்தைப் பொறுத்தவரை சட்டம் அல்லாஹ்வுக்குரியது, அதை நிறைவேற்றும் அதிகாரம், ஷுரா எனப்படும் ஆலோசனையின் அடிப்படையில் மக்களால் தெரிவு

செயய்ப்பட்ட கலீபாவிற்குரியது. அவர் சட்டத்தை நடைமுறைப்படுத்தி மக்களை வழி நடத்த வேண்டுமே தவிர, சட்டத்தின் அணுப்பிரமாணத்திலும் கைவைக்க முடியாது.

ஆனால் ஜனநாயகக் கோட்பாட்டில் தலைமை அதிகாரம் மக்களுக்குரியது. மக்கள்தாம் அதிகாரங்களின் மூலாதாரமாகும். நாட்டின் தலைவர் தவறு செய்கின்ற போது ஆர்ப்பாட்டங்கள், கலகங்கள், உண்ணாவிரம், அடையாள வேலை நிறுத்தம் போன்ற ஜனநாயக வழியில் அனுமதிக்கப்பட்ட உரிமைப் போராட்டங்களால் அதை முடிவுக்கு கொண்டுவருவார்கள்.

----------------

1- அல்மாயிதா. 48- வது வசனம்.

ஆரம்பகாலங்களில் ஐரோப்பியர்களை ஆண்ட மன்னர்களிடம் இறைத்தன்மையை வழங்கியே மக்கள் வாழ்ந்தனர், மன்னனுக்கே முழுமையான அதிகாரம் வழங்கப்பட்டது, அவன் எதை சட்டமாகப் பிறப்பித்தானோ அது சட்டமாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. மக்கள் எந்த அதிகாரமும் அற்ற நடைபிணங்களாக இருந்தனர். இதன் மூலம் மக்கள் பல அவஸ்தைக்குள்ளானார்கள், கலகங்கள் தோன்றின, கலவரங்கள் வெடித்தன, அந்த சர்வதிகார மன்னர்களை அகற்றிட மக்கள் ஆர்ப்பாட்டங்கள் செய்தார்கள் இதனால் பல கோட்பாடுகள் தோற்றம் பெற்றன, அவற்றில்: ***'தலைமை அதிகாரம் மக்களுக்குரியது. மக்கள்தாம் அதிகாரங்களின் மூலாதாரமாகும்'*** அதாவது சட்டங்களை மக்களே இயற்றுவர் என்ற கோட்பாடு மிக முக்கியமானதாகக் கொள்ளப்படுகின்றது என்ற அறிஞர் முஹம்மத் குதுப் சுட்டிக்காட்டுகின்றார்.(1)

சட்டங்கள் நிலையானதாகவும், பகுத்தறிவிற்குப் பொருத்தமானதாகவும் எல்லாக் காலத்திற்கும் இசைவானதாகவும், மனித மேம்பாட்டை நோக்காகக் கொண்டதாகவும் இருக்க வேண்டும். சட்டத்தை வகுக்கும் மனிதர்கள் ஒரு மனிதனின் சென்ற, மற்றும் நிழ்கால, எதிர்கால நிலைகள் பற்றி பூரணமாக அறிந்தவர்களாக இருக்க வேண்டும். அப்போதுதுான் மனித சட்டம் நிலையானதாகவும், எல்லாக்காலத்திற்கும் பொருந்திச் செவல்வதாகவும் அமையும். அது மனிதத் தன்மைக்குரியதல்ல, மாறாக இறைத்தன்மைக்கு மாத்திரம் உரியதாகும்.

இல்லாத போது அது என்றோ ஒரு நாள் வீழ்ச்சியை நோக்கியே பயணிக்கும். அல்லது அழிந்துவிடும். மட்டுமின்றி, அதற்கு ஈடான ஒரு கோட்பாட்டை உருவாக்க வேண்டி வரும். அந்தக் கொள்கையை நிலை நாட்டிடவும், பாதுகாக்கவும் அதற்காக பல சட்டங்களையும், கோட்பாடுகளையும் தோற்றுவிக்க நேரிடும்.

அதாவது அழிவில் இருந்து மீழ புதுபுதிதாக எதையாவது உருவாக்குவதும், காலத்தைக் கழிப்பதுமாக மாறிவிடும். மனித ஈடேற்றம் என்பது பூச்சியமாக இருக்கும்.

இதற்கு பொது உடமைப் பொருளாதார முறைமை சிறந்த உதாரணமாகும். தனிமனிதனிடம் சொத்துக்கள் இருப்பது கூடாது, அனைவரது சொத்துக்களும் அரசிடம் இருக்க வேண்டும், அரசு அவர்களின் நிலைகளுக்கு ஏற்ப செலவீனத்தை வழங்கும் போன்ற தத்துவம் ரஷ்யாவில் லெனின் என்பவரால் முன்வைக்கப்பட்டது. அது மார்க்ஸிஸம், லெனினிஸம் என புகழ்ந்து பேசப்பட்டு, பரபரப்பாக பின்பற்றப்பட்டு வந்தது. இப்போது அது ***எந்த அடையாளமும் இல்லாமல் புதைகுழிக்குள் தள்ளப்பட்டுவிட்டது.***

மனித இனம் தன்னைப் பற்றி அறிவது பற்றிய நிலைப்பாட்டை விளக்கும் மேற்கத்தேய அறிஞரான கிஸஸ் காரெல் என்பவரது கருத்தை இஸ்லாமிய சிந்தனையானர்களின் முன்னோடிகளில் ஒருவரான முஹம்மத் குதுப் பின்வருமாறு சுட்டிக்காட்டுகின்றார்.

**وفي الحق لقد بذل الجنس البشري مجهودا جبارا لكي يعرف نفسه ، ولكنه بالرغم من أننا نملك كنزا من الملاحظة التي كدسها العلماء والفلاسفة والشعراء وكبار العلماء الروحانيين في جميع الأزمان ، فإننا استطعنا أن نفهم جوانب معينة فقط من أنفسنا . إننا لا نفهم الإنسان ككل .. إننا نعرفه على أنه مكون من أجزاء مختلفة . وحتى هذه الأجزاء ابتدعتها وسائلنا . فكل واحد منا مكون من موكب من الأشباح تسير في وسطها حقيقة مجهولة ! وواقع الأمر أن جهلنا مطبق.فأغلب الأسئلة التي يلقيها على أنفسهم أولئك الذين يدرسون الجنس البشري تظل بلا جواب....**

--------------

1– محمد قطب: مذاهب فكرية معاصرة ص 539)

*உண்மையில், மனித இனம் தன்னைப்பற்றி அறிவதற்கென்று பாரிய முயற்சிகளைச் செலவிட்டுள்ளது. அறிஞர்கள், மெய்யிலாளர்கள், கவிஞர்கள், எல்லாக்காலத்திலும் வாழ்ந்த ஆத்மீகஞானிகள் போன்றோரால் நிரப்பப்பட்ட பெரியதொரு பொக்கிஷத்தை நாம் வளமாகக் கொண்டிருந்தும், நம்மைப்பற்றி நாம் ஒரு குறிப்பிட்ட பகுதியைத்தான் அறிந்து வைத்துள்ளோம். மனிதன் பற்றி நாம் முழுமையாக அறியவில்லை. நாம் அறிந்து வைத்திருப்பெதல்லாம் அவன் பல்வேறுபட்ட பாகங்களின் அமைப்பிலானவன் என்றுதான். இந்த பாகங்களைக் கூட நமது கருவிகள் கண்டுபிடித்தன. நாம் ஒவ்வொருவரும் புலன்களால் அறியக்கூடிய உறுப்புகளுகடன் படைக்கப்பட்ட, அதன் மத்தியில் அறியப்படாத, யதார்தத்தமாக பயணிக்கின்ற ஒரு கூட்டம்.*

*உண்மையாகக் கூறுவதானால் (நமக்கு அறிவில்லை) என்ற நமது அறியாமை மூடப்பட்டுவிட்டது. மனித இனம் பற்றி ஆய்வு செய்கின்ற மனிதர்கள் தம்மை நோக்கி கேட்கின்ற பெரும்பாலான கேள்விகளுக்கு பதில் இன்றி காணப்படுகின்றது (1)*

மனித இனம் தன்னைப் பற்றிக் கூட சரியாக இன்னும் அறியவில்லை எனும் போது யாவற்றையும் பற்றி நன்கு அறிந்த அல்லாஹ்வின் அறிவில் தங்கி நின்று சட்டம், ஒழுங்குகளை நடைமுறைப்படுத்துவதைத் தவிர அதன் சுபீட்சத்திற்கான வேறுவழிகள் இருக்க முடியாது.

اَللَّهُ الَّذِي خَلَقَ سَبْعَ سَمَاوَاتٍ وَمِنَ الْأَرْضِ مِثْلَهُنَّ يَتَنَزَّلُ الْأَمْرُ بَيْنَهُنَّ لِتَعْلَمُوا أَنَّ اللَّهَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ وَأَنَّ اللَّهَ قَدْ أَحَاطَ بِكُلِّ شَيْءٍ عِلْمًا [الطلاق : 12]

*அல்லாஹ்தான் ஏழுவானங்களையும், பூமியில் அதைப் போன்றதையும் படைத்தான். அவைகளுக்கு மத்தியில் அவனது கட்டளைகள் இறங்குகின்றன. நிச்சமாக அல்லாஹ் அனைத்துப் பெருட்களின் மீதும் ஆற்றல் மிக்கவன் என்றும், நிச்சயமாக அல்லாஹ் அனைத்து வஸ்துக்களையும் (தனது) அறிவால் சூழ்ந்துள்ளான் என்றும் நீங்கள் அறிவதற்காக (இவ்வாறு செய்கின்றான்). (அத்தலாக்: வசனம்: 12)*

அனைத்துப் பொருட்கள் பற்றி அறிவு உள்ளவன் யரரோ அவனது சட்டத்தில் குறைகள் இருக்கவே முடியாது என்பதை இந்த வசனம் உணர்த்துகின்றது.

## இஸ்லாமிய சட்டத்துறை பற்றிய வரலாற்றுப் பார்வை

இஸ்லாமிய சட்டம் பற்றிய ஆய்வுகள் திடுதிப்பென முளைத்தவை கிடையாது. அது அல்குர்ஆன் இறங்கிய காலத்திலேயே இறைவழிகாட்டலுக்கு அமைவாக எழுதப்பட்டவையாகும். மாத்திரமின்றி, அது காலத்தால் முந்தியதும், முன்மாதிரிமிக்கதுமாகும். மனித சட்டங்கள் அவ்வப்போது ஏற்படுகின்ற பிரச்சினைகளையும், அரசியல் நிலைகளையும் கவனத்தில் கொண்டு எழுதப்பட்டதாகும்.

சுராகா பின் மாலிக் என்பவருக்கு நபி (ஸல்) அவர்களால் எழுதித்தரப்பட்ட பாதுகாப்பு உத்தரவாதக் கடிதம், இஸ்லாமி வரலாற்றில் பிரசித்த பெற்ற மதீனா சாசனம், ஹுதைபிய்யா உடன்படிக்கை, போர்காலங்களில் நிறைவேற்றப்பட்ட உடன்படிக்கைகள், உறுதிமொழிகள், கலீபாக்கள் எனப்படும் இஸ்லாமிய ஆட்சியாளர்களால் கைச்சாத்தான உடன்படிக்கைகள் போன்ற நிகழ்வுகள் சிறந்த இதற்கு எடுத்துக்காட்டுகளாகும்.

----------------

1– محمد قطب: مذاهب فكرية معاصرة ص 539)

*(அத்தலாக்: வசனம்: 12)* –2

அல்குர்ஆனின் அல்மாயிதா என்ற ஐந்தாவது அத்தியாயம் உடன்படிக்கைகள் பற்றிய முன்னோடி அத்தியாயம் என வர்ணிக்கப்படுகின்ற அளவு அதன் ஆரம்ப, மற்றும் பல

வசனங்கள் உடன்படிக்கைகளை நிறைவேற்றுவதன் அவசியம் பற்றியும், போரின் போது பேண வேண்டிய விதிகமுறைள் பற்றியும் பேசி இருக்கின்றன.

அது மாத்திரமின்றி, அல்குர்ஆனில் பல இடங்களிலும், நபிகள் நாயகத்தின் காலத்து உரைகளிலும் இது பற்றிப் பேசப்பட்டிருப்பது இஸ்லாமிய சட்டத்தின் முதிர்ந்த தன்மையைக் காட்டுவதுடன், இஸ்லாம் பிற்போக்கான மார்க்கம் என்ற எதிரிகளின் தப்பான பிரச்சாரத்தையும் தகர்க்கின்றது. இவை தொலைந்து போன ஆவணங்கள் கிடையாது. மாற்றமாக, இன்றும் முஸ்லிம்களிடம் எந்த மாற்றமும் இன்றி பாதுகாக்கப்பட்டிருக்கும் பொக்கிஷங்களாகும்.

## இஸ்லாமிய சட்டத்துறையின் அடிப்படைகள்.

இஸ்லாமிய சட்டத்துறையானது அல்குர்ஆன், அஸ்ஸுன்னா என்ற இரண்டு அடிப்படை மூலாதாரங்களையும், அல்இஜ்மா, அல்கியாஸ் என்ற மற்றும் இரண்டு துணை மூலாதராங்களையும் கொண்டிருப்பதுடன், நபிகள் நாயகத்தின் அரசின் கீழ் நடைமுறையில் இருந்து வந்த சிறுபான்மையினர் உரிமைகள், போர், சமாதானம், உடன்படிக்கைள், கைச்சாத்துக்கள் போன்ற வழிமுறைகளில் இருந்தும் எடுத்துக் கொள்ளப்படுகின்றது.

இது இஸ்லாமிய சட்டத்தின் சிறப்பம்சமாகும். மனிதர்களைப் படைத்த அல்லாஹ்வின் ஈருலக திருப்தியையும், மனித குலத்தின் நலன்களையும் கருத்தில் கொண்டிருப்பதுடன், மனித சமூகத்தின் சுபீட்சம் இஸ்லாமிய சட்டத்தை நடைமுறைப்படுத்துவதில்தான் தங்கி இருக்கின்றது என்பதை உலகுக்கு எடுத்துக் கூறுவதை இலட்சியமாகக் கொண்டதாகும்.

إِنْ هُوَ إِلَّا ذِكْرٌ لِلْعَالَمِينَ [التكوير: 27] அது உலகத்தாருக்கு (படிப்பினைகளை உள்ளடக்கிய) நினைவூட்டலே அன்றி வேறில்லை. (1)

شَهْرُ رَمَضَانَ الَّذِي أُنْزِلَ فِيهِ الْقُرْآنُ هُدًى لِلنَّاسِ وَبَيِّنَاتٍ مِنَ الْهُدَى وَالْفُرْقَانِ [البقرة : 185] ரமளான் மாதம் எத்தகையது என்றால் அதில்தான் மனிதர்களுக்கு நேர்வழிகாட்டியாகவும், நேர்வழிகளில் பல சான்றுகளை உள்ளடக்கியதும், சத்தியத்தையும், அசத்தியத்தையும் பிரித்து அறிவிப்பதுமான அல்குர்ஆன் இறக்கப்பட்டது. (2)

மனிதர்களின் சொந்தக் கருத்துக்கள் இதில் முழுமையாக நிராகரிக்கப்பட்டதாகும். இதை இஸ்லாமிய ஆட்சியின் மூலம் உலகுக்கு உணர்த்துவதும் மற்றொரு நோக்கமாகும்.

وَإِذَا تُتْلَى عَلَيْهِمْ آيَاتُنَا بَيِّنَاتٍ قَالَ الَّذِينَ لَا يَرْجُونَ لِقَاءَنَا ائْتِ بِقُرْآنٍ غَيْرِ هَذَا أَوْ بَدِّلْهُ قُلْ مَا يَكُونُ لِي أَنْ أُبَدِّلَهُ مِنْ تِلْقَاءِ نَفْسِي إِنْ أَتَّبِعُ إِلَّا مَا يُوحَى إِلَيَّ إِنِّي أَخَافُ إِنْ عَصَيْتُ رَبِّي عَذَابَ يَوْمٍ عَظِيمٍ [يونس : 15] (3)

## இஸ்லாமிய அரிசயல் ஒழுங்குகளின் சிறப்பியல்புகள்.

வானங்களையும், பூமியையும் படைத்த அல்லாஹ் தனது படைப்புக்கள் நடைமுறைத்தி அவனது திருப்தியை அடைவதற்காக ஆதம் நபி (அலை) அவர்களின் காலத்தில் ஏற்படுத்திய வழிமுறையாகும். இது இறுதியாக வந்த நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு வழங்கப்பட்ட அல்குர்ஆன் மூலம் தெளிவுபடுத்தப்பட்டிருக்கின்றது (4)

அது பல சிறப்பம்சங்களைக் கொண்டதாகும். அது பற்றி இங்கு சுருக்கமாக நோக்குவோம்.

----------------

1- அத்தகவீர். 27-வது வசனம்

2- அல்பகரா: 185-வது வசனம்.

3- யூனுஸ். 15-வது வசனம்.

4- مجلة الجامعة الإسلامية بالمدينة المنورة – (53 / 30)

இஸ்லாமிய சட்டத்தின் சிறப்பியல்புகள் பின்வரும் தன்மைகளைக் கொண்டது.

***இறை வழிகாட்டல்களைச் சார்ந்தததது.*** ஆகவே அது, நிலையானதும், மனித அறிவைப் பயன்படுத்த முடியாததுமாகும். உலகில் தோன்றிய சட்டங்கள் யாவும் மனித கரங்கள் தயாரித்தவையாகும். அவை ஒரு அரசனை, நாட்டின் தலைவனை, அல்லது வல்லரசு நாடொன்றை, அல்லது குறிப்பிட்ட ஒரு வர்க்கத்தினை பாதுகாக்கும் நோக்கம் கொண்டதாக இருக்கும். அந்த சட்டங்களுக்கு எதிராக முரண்பாடுகள் தோன்றும், விமர்சனங்களும் தொடரும்.

இங்கு கம்யூனிஸ சட்டத்தை ஏற்றவர் முதலாளித்துவ சட்டத்தை விமர்சிப்பார், ஜனநாயக சட்டத்தை அங்கீகரித்தவர் அவ்விரண்டையும் விமர்சனம் செய்வார். ஆனால் இஸ்லாமி சட்டத்தில் அதற்கு இடமளிக்கப்படவில்லை. அவ்வாறு அவிமர்சனம் செய்யப்பட்டாலும் அதற்கான தக்க மறுப்புக்கள் அவ்வப்போது வெளிவந்து அதனை நிவர்த்தி செய்யும்.

திருட்டு, வழிப்பறிக் கொள்ளை, ஆள்கடத்தல், விபச்சாரம் போன்ற இஸ்லாமிய குற்றவியல் சட்டத்தில் நடைமுறையில் காணப்படும் கைவெட்டுதல், கொலை செய்தல், கல்லெறிந்து கொல்லுதல் போன்ற நடைமுறைகளை இங்கு குறிப்பிட முடியும்.

இஸ்லாத்தின் எதிரிகளால் தாறுமாறாக விமர்சிக்கப்படுகின்ற இந்த நடைமுறை உலகில் நடைமுறைக்கு வருமானால் சமூகச் சீரழிவுகள் குறைந்து, எய்டஸ் போன்ற உயிர்கொல்லி நோய்கள் நீங்கி, சமாதானம் மலர்ந்து, உலகம் சுபீட்சமும் நிம்மதியும் நிறைந்தாகக் காணப்படும்.

1- *சர்வதேசத்திற்கு பொருத்தமானதும், அரசியல், சமூக, பொருளாதா வாழ்வு என சகல பகுதிளையும் உள்ளடக்கியதுமாகும்.*

عَنْ سَلْمَانَ قَالَ قِيلَ لَهُ قَدْ عَلَّمَكُمْ نَبِيُّكُمْ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ كُلَّ شَيْءٍ حَتَّى الْخِرَاءَةَ قَالَ فَقَالَ أَجَلْ لَقَدْ نَهَانَا أَنْ نَسْتَقْبِلَ الْقِبْلَةَ لِغَائِطٍ أَوْ بَوْلٍ أَوْ أَنْ نَسْتَنْجِيَ بِالْيَمِينِ أَوْ أَنْ نَسْتَنْجِيَ بِأَقَلَّ مِنْ ثَلَاثَةِ أَحْجَارٍ أَوْ أَنْ نَسْتَنْجِيَ بِرَجِيعٍ أَوْ بِعَظْمٍ (مسلم/برقم:262)

ஒரு மாற்றுமதத்தவர் ஸல்மான் (ஸல்) அவர்களிடம் உங்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அற்பமான காரிங்களைக் கூட உங்களுக்கு கற்றுத்தந்துள்ளார் களே! என (பரிகாசமாக) வினவிய போது ஆமாம்! (உண்மைதான்). நாம் மலம், சலம் கழிக்கின்ற போது கிப்லாத்திசையை முன்னோக்குவது, கழிவறையை அகற்றுவதற்காக வலதை உபயோகிப்பது, மூன்று கற்களை விட குறைவானவற்றில் சுத்தம் செய்வது, காய்ந்த விட்டையினாலோ, அல்லது எலும்பினாலோ (மலத்தையோ அல்லது சலத்தையோ) சுத்தம் செய்வது ஆகியவற்றில் இருந்து எம்மை தடுத்துள்ளார்கள் என பதிலளித்தார்கள். ( (1)

ஹிர்குலிஸ் மன்னன் அபூ சுப்பயான் (ரழி) அவர்களுடன் உரையாடிக் கொண்டிருந்த போது அவர் உங்களுக்கு எதைக் கட்டளையிடுகின்றார் எனக்கோட்டார். அதற்கு அபூ சு.ஃ.ப்யான் , தொழுகை, தர்மம், போதும் என்ற பண்பாடு, உறவுகளுடன் சேர்ந்து வாழ்தல், மூதாதையர் சொல்வதைப் புறக்கணித்தல் ஆகிய பண்புகளைக் கொண்டு கட்டளையிடுகின்றார் எனப்பதில் அளித்தார். அதற்கு மன்னன், நீ சொல்வது உண்மையானால் அவர் எனது இந்த சிம்மாசனத்தையும் தனது ஆளுகையின் கீழ் கொண்டுவருவார், எனக்கு முடியுமானால் அவரை நான் சந்தித்து, அவரது பாதத்தையும் கழுவிடவும் தயார் என்றார் (2)

----------------------

1- ஆதார நூல்: முஸ்லிம் ஹதீஸ் இலக்கம்: 262.
2- ஆதார நூல் புகாரி: ஹதீஸ் இலக்கம்: 06

## 🕮 அன்பு, கருணை போன்ற நற்குணங்களை உள்ளடக்கியது

ஒரு மனிதனை வீணாகக் கொலை செய்வது முழு மனி இனத்தையும் கொலை செய்ததற்குச் சமம் என்று குறிப்பிடும் வழிமுறை மனித இனம் வீணாக அழிக்கப்படுவதை இஸ்லாமிய சட்டம் எதிர்க்கின்றது.

அவ்வாறே, ஒரு உயிரைக் கொலை செய்தவனுக்குரிய தண்டனை கொலைகாரன் கொல்லப்படுவதுதான் என்று மாத்திரம் தீர்ப்பளிக்கவில்லை. மாற்றமாக, அவனுக்கு மன்னிப்பு வழங்குவது இறையச்சத்திற்கு நெருக்கமானது எனக்குறிப்பிடுவதன் மூலம் மனித இனத்தின் மீது இஸ்லாமிய சட்டம் கருணையுடன் நடைமுறைப்படுத்தப்படுகின்றது.

காமிதிய்யா கோத்திரத்தைச் சேர்ந்த பெண் ஒருவர் திருமணம் முடித்த பின், தான் விபச்சாரம் செய்துவிட்டதாகவும், அதற்காக தன்னை சுத்தப்படுத்துமாறும் நிறைமாத கற்பிணியாக இருந்த நிலையில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்து தனது கோரிக்கையை முன்வைத்தார். நீ

உனது குழந்தையைப் பிரசவித்த பின்னால் வா எனக் கூறி அவரை நபி (ஸல்) அவர்கள் திருப்பி அனப்பி வைத்தார்கள். அவர், குழந்தையைப் பெற்றெடுத்ததும் அந்தக் குழந்தையை ஒரு பிடவைத்துணியினால் சுரட்டி எடுத்துக் கொண்டு வருகின்றார், குழந்தைக்குப் பால்குடி மறக்கடிப்பட்டதும் வா என்றார்கள். அவ்வாறே அந்தப் பெண் செய்கின்றார். பின்னர் அவருக்கு கல்லெறிந்து சட்டம் நிறைவேற்றப்பட்டது. அவரது இரத்தத்தின் துளி ஒரு நபித்தோழரின் மேனியில் பட்டபோது ச்சீ,ச்சீ என்றார். தோழரே! இந்தப் பெண் அல்லாஹ்விடம் செய்திட்ட பாவமீட்சியை மதீனாவில் வாழும் எழுபது பாவிகளுக்கு மத்தியில் விநியோகிக்கப்பட்டாலும் அது அவர்களையும் உள்ளடக்கிக் கொள்ளும் அளவு பெறுமானம் உடையது பற்றி நீர் அறிவீரா எனக் கேட்டார்கள். (1)

## *எளிமையானது, நடைமுறைச் சாத்தியாமானது, சிரமம் அற்றது.*

வணக்கம், கொடுக்கல் வாங்கல், குற்றவியல் என பரந்துபட்ட இஸ்லாத்தின் நடைமுறைகள் பல பிரிவுகளாகக் காணப்படுகின்றன. அவை அனைத்தும் இலகுவானதும், எளிமையாளதுமானதும், அனைத்து தரப்பாரும் பின்பற்ற முடியுமானதுமாகும்.

{يُرِيدُ اللَّهُ بِكُمُ الْيُسْرَ وَلا يُرِيدُ بِكُمُ الْعُسْرَ}. (2)

**அல்லாஹ் உங்களுக்கு இலகுவைத்தான் விரும்புகின்றான், இன்னும் அவன், உங்களுக்கு கஷ்டத்தை விரும்பவில்லை. (2)**

{يُرِيدُ اللَّهُ أَنْ يُخَفِّفَ عَنْكُم}. (3)

அல்லாஹ் உங்களைவிட்டும் **(கஷ்டங்களை)** இலகுவாக்கவே விரும்புகின்றான். (3)

***நுட்பமானது.*** இஸ்லாத்தின் கூறப்படுகின்ற வணக்கம், கொடுக்கல் வாங்கல், குற்றவியல் தொடர்பான சட்டங்கள் போன்றவைகளில் காணப்படும் நுட்பங்களை இதற்கு **உதாரணமாகக் கொள்ளலாம்.**

---------------

1- ஆதார நூல்: முஸ்லிம் ஹதீஸ் இல: 3207- பாடம்: ஒருவர் தான் விபச்சாரம் செய்ததை----

2- அல்பகரா, 185-வது வசனம்.

3- (அந்நிஸா: 28-வது வசனம்

## 🕮 *நிரந்தரத்தன்மை வாய்ந்தது.* இஸ்லாம் அல்லாஹ்வின் தீர்க்கதரிசிகள் எனும் நபிமார்கள் மூலம் முன்னெடுக்கப்பட்ட போது ஆரம்பத்தில் ஒரு சிலரே அதை அங்கீகரித்தனர், பலர் எதிர்த்தனர். இருந்தும் அது தனது பயணத்தை நிறுத்தாது இன்றும் தொடர்கின்றது. அதை ஏற்றுக் கொள்கின்ற மக்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்தவண்ணம் இருக்கின்றது. அதன் சட்டங்கள் இந்த காலத்திலும் வரவேற்கப்படுகின்றது. வட்டிஒழிப்பு, இஸ்லாமிய பொருளாதார முறைகள், குற்றவியல் சட்டங்கள் இதற்கு சிறந்த எடுத்துக்காட்டுகளாகும்.

يُرِيدُونَ لِيُطْفِئُوا نُورَ اللَّهِ بِأَفْوَاهِهِمْ وَاللَّهُ مُتِمُّ نُورِهِ وَلَوْ كَرِهَ الْكَافِرُونَ [الصف : 8] அவர்கள், அல்லாஹ்வின் பிரகாசத்தை தமது வாய்களினால் அணைத்திட விரும்புகின்றனர், அல்லாஹ் தனது பிரகாசத்தைப் பூரணப்படுத்தியே தீருவான். இறை நிராகரிப்பாளர்கள் வெறுப்புற்ற போதிலும் சரியே! (1)

## 🕮 *நீதி, சமத்துவம், சகோரத்துவம் போன்ற உயர் பண்புகளை உள்ளடக்கியது.*

இது இஸ்லாமி சட்டத்தின் முக்கியமான சிறப்பம்சங்களில் ஒன்றாகும். அனைவருக்கும் அவரவர் உரிமையை வழங்குவதே நீதி எனப்படும். இது ஆட்சித்தலைவரின் பொறுப்பாகும். அனைத்துப் பிரஜைகளையும் நீதியுடன் நடத்த வேண்டும். இல்லாத போது அது அல்லாஹ்வின் கட்டளையைப் புறக்கணித்தாகவும், மறுமையில் அதற்கான தண்டனையை அனுபவிக்க வேண்டியும் நேரிடும் என இஸ்லாம் எச்சரிக்கின்றது.

إِنَّ اللَّهَ يَأْمُرُكُمْ أَنْ تُؤَدُّوا الْأَمَانَاتِ إِلَى أَهْلِهَا وَإِذَا حَكَمْتُمْ بَيْنَ النَّاسِ أَنْ تَحْكُمُوا بِالْعَدْلِ (2)

நிச்சயமாக அல்லாஹ் அமானிதங்களை அதற்குரியவர்களிடம் ஒப்படைக்கவும், நீங்கள் மனிதர்கள் மத்தியில் தீர்ப்பளித்தால் நீதமாகத்தீர்ப்பளிக்கவும் கட்டளையிடுகின்றான். (2)

إِنَّ اللَّهَ يَأْمُرُ بِالْعَدْلِ وَالْإِحْسَانِ وَإِيتَاءِ ذِي الْقُرْبَى وَيَنْهَى عَنِ الْفَحْشَاءِ وَالْمُنْكَرِ وَالْبَغْيِ يَعِظُكُمْ لَعَلَّكُمْ تَذَكَّرُونَ (3)

நிச்சமயாக அல்லாஹ் நீதியைக் கொண்டும், பேருகாரம் செய்து நடக்குமாறும், நெருங்கி உறவினர்களுக்கு கொடுத்துதவுமாறும் ஏவுகின்றான். மானக்கேடானவைகள், தடுக்கப்பட்டவைகள், அத்துமீறுதல் ஆகியவற்றையும் தடுக்கின்றான். நீங்கள் நல்லுபதேசம் பெறும் பொருட்டு. இது போன்ற இன்னும் பல வசனங்கள் நீதியை நிலைநாட்டுவது பற்றிப் பேசுகின்றன.

இஸ்லாமிய சட்ட நடைமுறையில் வெள்ளையன், கருப்பன், படித்தவன், பாமரன், உறவுக்காரன், உறவு இல்லாதவன் என்ற பாரபட்சமின்றி நீதியை நிலைநிறுத் வேண்டும். அது கலீபாவின் சொந்தப்பிள்ளைகளாக இருந்தாலும் சரியே!

நபிகள் நாயகத்தின் காலத்தில் பாதிமா என்ற உயர் குலப் பெண் திருடுகின்றார், அவருக்காக உஸாமா பின் ஸைத் என்ற நபி (ஸல்) அவர்களுக்கு மிகவும் வேண்டப்பட்டவர் சட்டத்தை தளர்த்தும்படி பரிந்துரை செய்தார். இதற்காக கடுமையாக சினம் கொண்ட நபி (ஸல்) அவர்கள்,

وَايْمُ اللَّهِ لَوْ أَنَّ فَاطِمَةَ بِنْتَ مُحَمَّدٍ سَرَقَتْ لَقَطَعْتُ يَدَهَا– صحيح البخاري (4)

அல்லாஹ்வின் மீது சத்தியமாக! எனது மகள் பாத்திமா திருடினாலும் கூட அவரது கையையும் துண்டிப்பேன் எனக் கூறினார்கள். (4)

-----------------------

1- அஸ்ஸ.்.ப். 8-வது வசனம்.

2- அந்நிஸா: 58-வது வசனம.

3- அந்நஹ்ல்: 90-வது வசனம்.

4- ஆதார நூல்: புகாரி. ஹதீஸ் இலக்கம்: 6289- பாடம்: உயர்ந்தவர், தாழ்ந்தவர் அனைவருக்கும் சமமாக சட்டத்தை நிறைவேற்றுதல்.

எகிப்தின் கவர்னாக இருந்த அம்றுபின் ஆஸ் அவர்களின் மகன் கிப்த் இன அடிமைகளில் ஒருவனைத் தாக்கி இருந்தார், இது விஷயமாக மதீனாவைத் தலைமையமாகக் கொண்டு ஆட்சி செய்து கொண்டிருந்த கலீ.்.பா உமர் பின் கத்தாப் அவர்களின் கவனத்திற்கு கொண்டு வரப்பட்டது. ரோமாபுரியின் ஆட்சியின் கீழ் வதைக்கப்பட்டது போன்று இவர்கள் வதைக்கப்படுவதை கலீ.்.பா அவர்கள் விரும்பவில்லை. மாற்றமாக நீதியைப் பெற்றுத்தர அவர் அழைக்கப்படுகின்றார். *பின்பு அந்த கிப்தி அடிமையிடம், இரு சங்கையாளர்களின் மகனை நீ அடிக்கலாம் எனத் தீர்ப்பளித்தார்கள்.* அம்று பின் ஆஸ் அவர்களின் மகனை மதீனாவிற்கு வரும்படி செய்தி அனுப்பினார்கள்.

[متى استعبدتم الناس، وقد ولدتهم أمهاتهم أحرارا !]

*மனிதர்களை நீங்கள் எப்போது அடிமையாக்கிக் கொண்டீர்கள், அவர்களின் அன்னையர் அவர்களை சுதந்திரப் புருஷர்களாகவே பிரசவித்துள்ளார்கள் !!! எனக் கூறினார்கள்.*

*ஹிஜ்ரி முதலாம் நூற்றாண்டில் நடந்த இந்த நீதி நிகழ்வு பற்றிய வாசகங்களை ஐரோப்பா 1790 களில் ஏற்பட்ட பிரான்ஸ் கைத்தொழில் புரட்சியின் போதுதான் கேள்விப்பட்டது, அந்தப் புரட்சியின் கோஷமாக 'மனிதன் சுதந்திரமானவனாகவே பெற்றெடுக்கப்படுகின்றான்" என்பதாக இருந்தது. அப்படியானால் இது நடந்து முடிந்து 1000 வருடங்களின் பின்னர்தான் இது பற்றி அறிந்துள்ளனர் என நவீன கால இஸ்லாமிய சிந்தனையாளர்களுள் ஒருவரான ஸல்மானுல் அவ்தா என்பவர் சுட்டிக்காட்டுகின்றார். (1)*

يقول ابن تيمية رحمه الله : إن الله لينصر الدولة الكافرة العادلة على الدولة المسلمة الجائرة،

*அநீதியாக நடக்கின்ற முஸ்லிம் நாட்டை விடவும், நீதியாக நடக்கின்ற இறை நிராகரிப்பான - காபிரான- நாட்டுக்கு நிச்சயமாக அல்லாஹ் உதவி செய்வான் எனக் குறிப்பிட்டார்கள். என்று இமாம் இப்னு தைமிய்யா அவர்கள் குறிப்பிடுகின்றார்கள். (2)*

நீதி என்ற பண்பு காணப்படும் முஸ்லிம் அல்லாத நாடுகளுக்கு அல்லாஹ் உதவுவான் என இந்த வார்த்தையின் ஆளம் பற்றி விளக்கப்படுகின்றது (3)

## இஸ்லாமிய சட்டங்களும், முஸ்லிம் கலீ:பாக்களும்

இஸ்லாமிய ஆட்சியை நிறுவிய நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் மரணத்தின் பின்னால், கலீ:.பாக்களால் நடத்தப்பட்ட நல்லாட்சியிலும் சரி, உமையா, அப்பாஸிய, உஸ்டானியர் ஆட்சியிலும் சரி! அனைத்து ஆட்சியின் கீழ் வாழ்ந்த சிறுபான்மை மக்கள் நீதி, நேர்மையுடனும்தான் நடத்தப்பட்டார்கள்.

அங்கு வாழ்ந்த முஸ்லிம்கள், முஸ்லிம் அல்லாதவர்கள் என எவரும் தரக்குறைவாக நடத்தப்படவில்லை. நீதி, நேர்மை, சமத்துவம், உரிமை என எல்லாம் வழங்கப்பட்டே நடத்தப்பட்டனர். முஸ்லிம் படைகள் வெற்றி கொண்ட பல பிரதேசங்களிலும் முஸ்லிம் அல்லாத மக்கள் கண்ணியமகவே நடத்தப்பட்டார்கள். மிருகங்களைப் போன்று அவர்கள் நடத்தப்படவில்லை. இந்த உயரிய நடைமுறைக்கு இறைவழிகாட்டலே பிராதான காரணியாக விளங்கியது என்பதை மறுக்க முடியாது.

இஸ்பைனை வெற்றி கொண்ட முஸ்லிம்கள் எட்டு நூற்றாண்டுகள் ஆட்சி செய்தார்கள். அவர்கள் அங்கு வாழ்ந்த கிரஸ்தவர்களை முஸ்லிம்களாக மாறும்படி அவர்களை வற்புறுத்தியதில்லை. ஆனால் கிரிஸ்தவர்கள் இதற்கு மாற்றமாக நடந்தற்கு வரலாற்றில் பல சான்றுகள் உண்டு.

--------------

1- مقالات الشيخ سلمان العودة - (43 / 4) نقلت من المكتبة الشاملة -الإصدار السابع

2 – مجلة مجمع الفقه الإسلامي - (7 / 2282)

3- مجلة مجمع الفقه الإسلامي - (7 / 2282)

அவ்வாறே, முஸ்லிம்கள் இந்தியாவை எட்டு நூற்றாண்டுகள் ஆட்சி செய்தார்கள். இந்துக்களை, சீக்கியர், சமனமதத்தவர் என பல மதத்தவர்கள் வாழ்ந்து கொண்டிருந்தனர். அவர்களை இஸ்லாத்தில் பிரவேசிக்கும்படி முஸ்லிம் மன்னர்கள் வற்புறுத்தியதில்லை. பகுத்தறிவிற்கும், மனித பண்பாட்டிற்கும் பொருத்தமற்ற இந்துக்களின் வணக்க முறைகளை பலத்தைப் பிரயோகித்துக் நிறுத்த முடியுமாக இருந்தும் அவ்வாறு செய்யவில்லை. கணவன் மரணித்தால் மனைவி உடன்கட்டை ஏறுதல் என்ற மூர்க்கத்தனமான சித்தாந்ததை பெண்களி நன்மை நாடித் தடை செய்தார்கள். (1 )

இறை சட்டத்தில் மனிதனுக்குத் தேவையான சகலவிதமான உத்தரவாதங்களும் தங்கி இருக்கின்றது என்பது இதன் மூலம் புலப்படுகின்றது. காலப்போக்கில் முஸ்லிம் அரசுக்குள் காணப்பட்ட உட்பூசல்கள் காரணமாக பலவீனம் ஏற்படுகின்றது. அதன் பயனாக இஸ்லாத்தி பரமஎதிரிகள் அதன் பிரதேசத்தில் நுழைந்து, துவம்சம் செய்தனர், இறைச்சட்டங்களை இல்லாதொழித்து, மனித சட்டங்களை அங்கு நிலைநாட்டினர். இன்னும் சொல்லப்பொனால் முஸ்லிம் பிரதேசங்களைத் துண்டாடி, அங்கு தமது சட்டங்களை நிலைநாட்டினர்.

இவர்கள் தமது ஆதிக்கத்தின் கீழ் வரும் எந்த பிரதேசத்திலும் இஸ்லாமிய சட்டங்களை ஒழித்து மேற்கத்தை சட்டங்களையே புனிதமாகக் கருதினர். மதச்சார்பின்மை, தாராண்மை வாதம் பேசுகின்ற இவர்களின் அடிவருடிகளும் முஸ்லிம் பிரதேசங்களில் இறை சட்டத்திற்கு எதிராக மனித சட்டங்கள் அரங்கேற்ற காவலாளிகளாக செயல்பட்டனர்.

## மேற்கத்தைய சட்டங்களில் காணப்படும் குறைபாடுகள்

மேற்கத்தைய சட்டங்களில் காணப்படும் குறைபாடுகள் பற்றி அறிவதன் மூலம் இஸ்லாமிய சட்டத்தின் நிலையான தன்மை பற்றி விளங்க முற்படுவோம்.

### *மனிதர கரங்களால் வடிக்கப்பட்டவைகள்.*

யாப்புக்கள் வரைவதற்கான தோற்றப்பாடுகள் நவீன காலத்தில் யாப்புகள் வரையும் அமைப்புக்களின் செயற்பாடுகள் காரணமாகவே தோற்றம் பெற்றதது. அவ்வமைப்பு தனது பணியை முதலாவதாக அமெரிக்காவில்தான் ஆரம்பித்தது. அதன் பின்னர், அங்கிருந்து பிரான்ஸுக்கும், பின்னர் ஏனைய உலக நாடுகளுக்கும் அந்த சிந்தனை எடுத்துச் செல்லப்பட்டது.

அமெரிக்க வரலாற்றில் கி.பி. 1778-ம் ஆண்டு முதலாவது யாப்பு வரையப்பட்டது. அதைத் தொடர்ந்து பிரான்ஸின் புரட்சியின் பின்னர், 1971-ம் ஆண்டு பிரான்ஸின் முதலாவது யாப்பு வரையப்பட்டது. இவ்வாறு உலகுக்கு யாப்பு வரைதல் சிந்தனை உலகில் பரவியது. இந்த திட்டம் யூதர்களின் கண்காணிப்பில்தான் நடந்தேறியது. (2)

اتَّخَذُوا أَحْبَارَهُمْ وَرُهْبَانَهُمْ أَرْبَابًا مِنْ دُونِ اللَّهِ وَالْمَسِيحَ ابْنَ مَرْيَمَ [التوبة : 31]

அவர்கள், தமது மதகுருக்களையும், சன்னியாசிகளையும், மர்யமின் மகன் மஸீஹையும் அல்லாஹ்வை விடுத்து சட்டம் இயற்றும் அதிகாரிகளாக எடுத்துக்கொண்டனர். என அல்குர்ஆன் குறிப்பிடுவது போன்று ஐரோப்பா மார்க்கம் பற்றி கிஞ்சிற்றும் அறிந்திருக்கவில்லை. (4)

---------------------------------------------

1- محمد قطب : مذاهب فكرية معاصرة ص 589– 596 )
2- الإسلام والدستور – (1 / 26 ) للمؤلف : توفيق بن عبد العزيز السديري
3- التوبة: آية . 31 .
4- محمد قطب . المصدر السابق

ஈஸா அலை அவர்கள் பிறந்து மூன்று நூற்றாண்டுகள் கிரிஸ்தவர்கள் கடுமையாக வதைக்கப்பட்டார்கள். நான்காவது நூற்றாண்டில் சிலை வணங்கியான கொஸ்தான்தீன் சக்கவர்த்தி கிரிஸ்த்தை ஏற்றுக் கொண்டு தனது வல்லரசின் மீது அதைத் திணித்தான்.

இருந்தும், அவனது தவறான நம்பிக்கையைக் களைய கிரிஸ்தவ திருச்சபையோ, அதிலுள்ள புத்திஜீவிகளோ எந்த முயற்சியும் எடுக்கவில்லை. மாற்றமாக, அதனுடன் இரண்டரக் கலந்து செயல்பட்டனர். இதனால் சிலை வணக்கமும், கிரிஸ்தவமும் இணைந்த புது மதம் உருவானது.

இதனால், ஈஸா நபி (இயேசு) (அலை) அவர்கள் கொண்டு வந்த தூய மார்க்கத்தை விட்டும் விலகி பிதா, சுதன், பரிசுத்தி ஆவி என்ற திரிபுக் கோட்டையும், சிலைவணக்கத்தையும் உள்ளடக்கிய புதிய நம்பிக்கைக் கோட்பாட்டின் ஊடாக கிரிஸ்தவத் திருச்சபைகள் மக்களை மதத்தின் பேயரால் சுரண்டத் தொடங்கின.

இயேசுநாதர் ஒரேநேரத்தில் கடவுளாகவும், மனிதாகவும் இருப்பார், அவர், ஒரு பரிசுத்த ஆவி. எனவே அவரிடம் நெருங்கிட உலகப் பொருளில் நாட்டமின்மை, தேவைக்கு அதிமான செலவம் அவசியமற்றது போன்ற பொய்த்துறவறம் பற்றிப் பேசி கடவுளை நெருங்குவதற்கு கிரித்தவ ஆலய மதக்குருமார்களிடம் ஏதாவது காணிக்கைகள் வழங்கிய பின்பே நெருங்கலாம் என்ற தத்துவத்தினை முன்வைத்து மக்களைச் சுரண்டி வாழ்ந்தனர்.

ரோமாபுரி மன்னனால் முன்னெடுக்கப்படுகின்ற இந்த ஆட்சி முறைக்கு புதிய வியாக்கியானம் தர முற்பட்ட கிரிஸ்த மதக்குருக்கள், வான் உலகை அல்லாஹ்வும், வெளியுலகை மன்னர் கிஸ்ர் மன்னர் ஆட்சி செய்கின்றார். அதனால் கைஸர் -கிஸ்ர்- மன்னன் விரும்பியவாறு நடக்கலாம் எனக் கூறினர்.

இவ்வாறு அனைத்து காரியங்களையும் ரோமாபுரியிச் ஆட்சிக்கு களம் தந்த மதகுருக்கள் தனியார் சிவில் சட்டம் தொடர்பான திருமணம், விவாகரத்து, பாவமன்னிப்பு வழங்குதல் போன்ற சில அம்சங்களை மாத்திரம் தமது பிடிகளில் வைத்திருந்தனர். இதன் மூலம், ***மதச்சார்பின்னை*** என்ற ஒரு கொள்கை பிறக்கின்றது.

ஆன்மீகத்திற்கு மாத்திரம் முன்னுரிமை வழங்கி ஆன்மாவுடன் தொடர்புகள் கொள்ள மதகுருக்கள்தாம் தகுதி பெற்றவர்கள், மக்கள் தம்மை நாடி வந்தே தமது ஆன்மீகம் சார்ந்த தேவைகைளை நிறைவேண்டும் என்ற மாயையில் மக்களை வீழ்த்தியது திருச்சபை.

இங்கு பகுத்தறிவு ரீதியாக மக்களிடம் இருந்து எழுகின்ற கேள்விகள் மதத்திற்கு எதிரான போக்காகவும், பெரும்பாவமாகவும் பிரச்சாரம் செய்யப்பட்டது. கண்மூடித்தனமான இந்த நம்பிக்கையை விரும்பியோ, விரும்பாமலோ மக்கள் பின்பற்றுவதற்கு வற்புறுத்தப்பட்டனர், பைபிளை தமது வசதிக்குத் தேவையான அமைப்பில் மாற்றியமைத்து மக்களை வழி கெடுத்தினர். தம்மை கடவுளின் அவதாரங்களாக நினைத்து மக்களை மதத்தின் பெயரால்

சுரண்டினர். '**ஒட்டகம் ஊசியின் ஓட்டையினுள் எவ்வாறு நுழைய முடியாதோ அவ்வாறே செல்வம் தேடுகின்ற செல்வந்தவன் கடவுளின் சன்னிதானத்தை அடைய முடியாது**'' என்ற பிரச்சாரத்தை முடுக்கிவிட்டனர்.

தமது மக்களின் செல்வங்களைத் தவறான வழியில் சேகரித்து ஆயிரக்கணக்கான உல்லாச ஹோட்டல்களுக்கும், பல்லாயிரம் ஏக்கர் பரப்பளவு நிலங்களுக்கும் சொந்தக்காரர்களாகவும், ஆயிரக்கணக்கான அடிமைகளுக்கு எஜமானர்களாகவும் இருந்தனர். மக்களிடம் பணத்தை எப்படி எல்லாம் சுரண்ட முடியுமோ அப்படி எல்லாம் சுரண்டினர்.

-----------------------------------

1– محمد قطب : مذاهب فكرية معاصرة ص 9– 18 )

தமது உபதேசங்களை கேட்டு வழிப்படும் மன்னர்களையே என்ற மக்களை ஆட்சி செய்ய அனுமதித்தனர். தமது சட்டங்களை இறைச் சட்டமாக்கினர். இதற்காக ஆயிரக்கணக்கான உயிர்கள் பலி கொள்ளப்பட்டும், சொத்துக்கள் சூறையாடப்பட்டும் இருக்கின்றன. இவ்வாறு இறை சட்டத்தை பாழடித்தனர்.

ஐரோப்பாவில் கிரிஸ்தவப் பரம்பலுக்கு முடிவுகட்ட சந்தர்ப்பம் பார்துக் கெண்டிருந்த யூதர்களின் பின்னணியில் பிரான்ஸில் நிலமானிய முறைக்கு எதிராகப் பிரச்சாரம் துவக்கப்பட்டது. அதற்கு மக்கள் செவி சாய்த்தனர், இதன் விளைவாக ***சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம், ஜனநாயகம்*** என்ற யூதர்களின் மூலமந்திரம் நிறைவேறியது. இந்த நான்கு அம்சத்திட்டத்தின் ஊடாக தமக்குத் தனியான தேசமும், உலகை சீரழிப்பதற்கான முழுயையான நிகழ்ச்சி நிரலையும் யூதர்கள் வரைந்தனர்.

கிரிஸ்தவ உலகின் முக்கிய புள்ளியாக இடம் பெறும் பிரான்ஸில் புரட்சி வெடித்ததும், தம்மிடம் இருந்து சொத்துக்களை வழங்கி வட்டி வங்கிகள் நடத்தி, மீண்டுமொரு அடிமைத்தனத்தை உருவாக்கிட யூதர்கள் முயற்சி செய்தனர். இதனால் சமஉமைப் பொருளாதாரம் என்ற கோட்பாடு பிறக்கின்றது.

நிலமானிய பிரபுத்துவப் பேராபத்தில் இருந்து தம்மைக் காப்பாற்றிக் கொள்ள விரும்பிய மக்கள் சமஉடமைக் கொள்கையை வீறுகொண்டு ஆதரிக்கத் தொடங்கினர், இதன் காரணமாக சாக்கடைக்குள் வீழ்ந்து தமது எஞ்சிய மார்க்கத்தையும் தொலைத்தனர்.

இதில் யூத இனத்தைச் சேர்ந்த காரல் மாக்ஸ், (2) பிரைட், (3) டோர்ஹாயீம் (4) என்ற மூன்று யூதர்களின் பங்களிப்பால் ஐரோப்பாவை யூதர்கள் ஆக்கிரிமிக்க வழிபிறந்தது. இது நிலமானிய முறை ஒழிக்கப்பட்டதுடன், சமத்துவப் போர்வையில் அரசியல், சமூக, கலாசார, பண்பாடுகள் சீரிழிக்கப்பட்டது.

ஆயிரம் நூற்றாண்டுகளாக ரோமாபுரி வல்லரசின் ஊடாக ரோமானிய சட்டத்தை நடைமுறைப்படுத்தி வந்த கிரஸ்தவ திருச்சதைதான் ஐரோப்பாவை யூதர்களுக்கு தாரை வார்த்தது.

மனித இனம் உலக வரலாற்றில் என்றும் இல்லாதவாறு மனித இயல்பை மாற்றியமைக்க '*இயற்கைதான் அனைத்தும், அனைத்தையும் இயற்கைதான் படைக்கின்றது*'' என்ற யூதனாகவே இல்லாத டார்வினின் தத்துவத்தை உள்வாங்கி இறை நிராகரிப்பை விழுங்கிக் கொண்டது. ஐரோப்பா யூத சட்டத்தினை முன்னிலைப்படுத்தி தனது ஈருலிகின் அழிவையும் தேடிக்கொண்டது.

திருச்சபைகள் கடவுளின், மதத்தின் பெயரால் மக்களுக்கு இழைத்த அநீதி காரணமாக நிலமானிய பிரபுத்துவ முறை இல்லாதொழிக்கப்பட்டு பொது உடைமையைத் தத்துவக் கோட்பாடு தோற்றுவிக்கப்பட்டது. உரிமைகள் இன்றி நடத்தப்பட்ட யூதர்கள் ஜனநாயகம் என்ற போர்வையில் நுழைந்து தமது நோக்கங்களை நிறைவேற்றிக் கொண்டனர்.

இந்த வரலாற்றுப் பின்னணியை நோக்குகின்ற போது வரையப்பட்ட சட்ட ஒழுங்கினைக் கொண்டிராத, மனித சட்டங்களில் மாத்திரம் தங்கி இருப்போராக ஐரோப்பியர்கள் வாழ்ந்தனர் என்பதும், அவ்வப்போது இழைக்கப்பட்ட கொடுமைகளை இல்லாதொழிக்க மேற்கொள்ளப்பட்ட எதிர்ப்பின் பயனாக மேற்கில் சட்டங்கள் பிறந்தன என்பது இங்கு புலப்படுகின்றது.

---- --------------------

1- முஹம்மத் குதுப் .மதாஹிப் பிக்ரிய்யா முஆஸரா. பக்கம். 79- முதல், 110 வரை.

2- பிறப்பு:கி.பி. 1812.மரணம்.1883 ஜேர்மனைச் சேர்ந்த யூதர். டார்வினின் தத்துவத்தை உலகுக்கு அறிமுகம் செய்தவர்.

3- பிறப்பு. கி.பி.1858- மரணம். 1917. இவர் பிரான்ஸைப் பிறப்பிடமாகக் கொண்ட யூதர்.

4- பிறப்பு: கி.பி. 1856- மரணம் 1938. அஸ்ட்ரியா நாட்டைச் சேர்ந்த யூதர்.

யூதர்கள் பின்புலத்தில் நின்று செயலாற்றி இருக்கின்றார்கள் என்ற உண்மை இங்கு குறிப்பிடத்தக்க அம்சமாகும்.

பிற நாடுகளைச் சுரண்டி வாழ்வதற்காக ஐரோப்பியர்களால் முன்னொடுக்கப்பட்ட போர் நடவடிக்கைகள் காரணமாகவும் மனித உரிமை, சட்டங்கள் இந்த சட்டங்கள் அவ்வப்போது அவசியப்பட்டவைகளை சட்டங்களாகப் பிரகடனப்படுத்தப்பட்டன.

அவை மனித கரங்களாலேயே உற்பத்தி செய்யப்பட்டது மேற்கின் சட்டங்கள் அல்லாஹ்வின் மார்க்கமான இஸ்லாமிய சட்டத்தைப் புறக்கணிக்கின்ற நோக்குடன் தோற்றுவிக்கப்பட்டவைகளாகும். (1)

இந்த சட்டஙகள் மனித இனத்திற்கு ஈடேத்தைக் கொடுத்ததா என்றால் சீரழிவையும், நிம்மதியற்ற வாழ்வையுமே பரிசாக வழங்கியது என்பதுதாக் உண்மை.

أَفَحُكْمَ الْجَاهِلِيَّةِ يَبْغُونَ وَمَنْ أَحْسَنُ مِنَ اللَّهِ حُكْمًا لِقَوْمٍ يُوقِنُونَ [المائدة : 50]

ஜாஹிலிய்யக்கால சட்டங்த்தையா இவர்கள் விரும்புகின்றனர்! அல்லாஹ்வை விட அழகிய சட்டம் இயற்றும் யாரும் உண்டா ? உறுதியான நம்பிக்கையுடையவர்களுக்கு (இது பற்றி அவன் விளக்குகின்றான்) . (2)

## குறைபாடுகள் நிறைந்தவை.

இஸ்லாமிய சட்டம் முழுமை பெற்றதாகவும், மனித மேம்பாட்டைக் கருத்தில் கொண்டதாகவும் இருப்பதை அதன் சிறப்பியல்புகள் பற்றிய பகுதியில் சுட்டிகாட்டப்பட்டுள்ளது. மனித சட்டம் மனிதனால் வகுக்கப்படுகின்ற காரணத்தால் அது பல குறைபாடுகளை உடையதாக இருக்கின்றது.

உதாரணமாக இஸ்லாமிய சட்டத்தில் காணப்படும் திருட்டுக்கு வழங்கப்படுகின்ற கைதுண்டிப்புச் சட்டம். இது அநீதியானது, சாதாரண ஒரு பொருளைத் திருடினான் என்பதற்காக அவனது வாழ்வுக்கே குந்தகம் விளைவிப்பது நல்லதா என சந்தேகம் வெளியிடுவதுடன், கள்ளனுக்காக பரிந்துரை செய்யப்படுகின்றது. இது கேட்பதற்கு இனிமையாகவும், பாதிக்கப்பட்டவனுக்கு உரிமை பெற்றுத்தருவது போலவும் தோன்றினாலும் உண்மையில் அவனது ஒரு கரத்தினை துண்டிப்பது பொது நலனைக் கருத்தில் கொண்டு, பலரது சொத்துக்களைப் பாதுகாக்கும் நோக்குடம்தான் செய்யப்படுகின்றது.

ويقول ابن عبد السلام: "من أمثلة الأفعال المشتملة على المصالح والمفاسد مع رجحان مصالحها على مفاسدها قطع يد السارق فإنه إفساد لها، ولكنه زاجر حافظ لجميع الأموال فقدمت مصلحة حفظ الأموال على مفسدة قطع يد السارق" (3)

இஸ்லாமிய சட்டத்தின் நுணுக்கமான தன்மையை விளக்கும் அறிஞர் 'இஸ்ஸு' பின் அப்திஸ்ஸலாம்'' , ''நன்மைகள், தீமைகள் (சாதக, பாதகங்கள்)இரண்டிலும் தீமையை விட நன்மை அதிகம் காணப்படுவதற்கு உதாரணமாக, திருடன் கையைத் துண்டிப்பதை உதாரணமாகக் கொள்ளலாம்''

''கை துண்டிப்பு உண்மையில் அவனது உறுப்பினைப் பாழடிப்பதாக நோக்கப்பட்டாலும், திருடனின் கையினைத் துண்டிக்கின்ற இந்த பாதகமான முடிவால் பலரது சொத்துக்கள் பாதுகாக்கப்பட தடையாக அமையும் என்ற பொருளாதாரங்களை பாதுகாத்தல் என்ற பொது நலனைக் கருத்தில் கொண்டு முடிவு செய்யப்பட்டுள்ளது'' எனக் குறிப்பிடுகின்றார்கள்.

------------------------------------------------

1- முஹம்மத் குதுப் .மதாஹிப் பிக்ரிய்யா முஆஸரா. பக்கம். 79- முதல், 110 வரை.

2- அத்தியாயம்: அல்மாயிதா. வது வசனம்.

3- مجلة الجامعة الإسلامية بالمدينة المنورة – (6 / 488)

அவ்வாறே, கொலை செய்தவனைக் கொலை செய்தல் என்ற இஸ்லாமிய சட்டத்தை எடுத்துக் கொண்டால் அது கருணைக்கு அப்பாற்பட்டது என்பார்கள். ஆனால் பயங்கரவாதத்திற்கு எதிரான போர் என்ற போர்வையில் உலகில் உள்ள அனைத்து உயிர்களையும் கொலை செய்யவும் துணிந்துவிடுவார்கள்.

{ وَلَكُمْ فِي الْقِصَاصِ حَيَاةٌ يَاأُولِي الْأَلْبَابِ لَعَلَّكُمْ تَتَّقُونَ } (البقرة: **179**) .

**சிந்தனையுடையோரே! நீங்கள் கொலைக்குப் பழிதீர்ப்பதில் (உயிருக்கு) வாழ்க்கை உத்தரவாதம் உங்களுக்குண்டு. நீங்கள் அல்லாஹ்வை அஞ்சும் பொருட்டு (இது விதியாக்கப்பட்டுள்ளது)** (1) இந்த வசனம் மனிதர்களைக் கொலை செய்வன் கொலையின் மூலம் தண்டிக்கப்படுவதால் ஏனைய உயிர்களுக்கு பாதுகாப்பு உத்தவாதத்தை இஸ்லாம் சட்டத்தின் மூலம் தருகின்றது.

## மனித பண்பாடுகள் அற்றவை.

இதுவும் மேற்கத்தைய சட்டங்களில் காணப்படும் முக்கிய குறைபாடாகும். அதனால்தான் வரையறைகள் இல்லாத மிருகங்களாக மேற்கில் மக்கள் வாழ்கின்றனர். தாய்க்கு பிள்ளையைத் தெரியாது, பிள்ளைக்கு தாயைத் தெரியாது, கொலை, தற்கொலை, வாழ்வில் விரக்தி இதுவே இவர்களின் கலாச்சாரம்.

வட்டி, விபச்சாரம், மது போன்ற சமூக விரோதச் செயல்கள் சுதந்திரத்தின் பெயரால் சமூகத்தைச் சீரழிக்கும் கிருமிகளாக இருப்பதை மேற்கத்தியர்கள் இன்னும் அறியவில்லை.

இஸ்லாமிய சட்டத்தில் மார்க்கம், பகுத்தறிவு, பரம்பரை, மானம், பொருளாதாரம் ஆகிய ஐந்து அம்சங்களை உள்ளடக்கிய அடிப்படைக் கோட்டின் மூலம் மனித இனத்திற்குரிய எல்லாவித பாதுகாப்பும் வழங்கப்பட்டிருக்கின்றது.

பெண்விடுதலை, தனிமனித சுதந்திரம், சமத்துவம் என்றெல்லாம் அதிகமதிகம் அலட்டிக் கொள்ளும் அமெரக்காவின் குற்றச் செயல்களின் விகிதாசார நிலையைக் கொஞ்சம் கவனியுங்கள்.

1- ஒவ்வொரு நிமிடத்திற்கும் ஒருவர் கொலை.
2- ஒவ்வொரு நிமிடத்திற்கும் ஆயுதம் தாங்கியோரால் திருட்டு.
3- ஒவ்வொரு இருபது நிமிடத்திற்கும் ஒருவர் கடத்தல், கற்பழிக்கப்படுதல்.
4- பதிவு செய்யப்படாத பாலியல் துஷ்பிரயோகங்கள் ஆயிரமாயிரம்.

இது உலகப் பொலிஸ்காரன் வீட்டில் நடக்கும் குற்றங்கள். அடுத்ததாக ஜேர்மனிக்கு வாருங்கள்.

அங்கு 1969-ம் ஆண்டு கொலைக் குற்றப்பதிவானது இரண்டாயிரத்தையும் தாண்டியது. 1971ம் ஆண்டில் குற்றச் செயல்கள் பற்றிய பதிவு மூவாயிரத்துக்கும் அதிகமானது என கணிப்பீட்டில் பதியப்பட்டுள்ளது.

பிரிட்டனின் பக்கம் கொஞ்சம் கவனத்தை திருப்பினால் 1970-ன் மதப்பீட்டின்படி41088 பேர் கொலை குற்றத்திற்காகவும், பிறருக்கு எதிராக அத்துமீறல்களாக இரண்டு ஆண்டுகளில் மாத்திரம் அரைமில்லியனை எட்டியது.

**பிரான்ஸில்** முப்பத்தி இரண்டு வீதமான குற்றச் செயல்கள் பதிவு செய்யப்பட்டுள்ளது. ரஷ்யாவைப் பற்றிக் கேட்கவா வேண்டும். அது உலகில் ஒரு சிறையாகவே திகழ்கின்றது ஏனெனில் அதன் முழுவாழ்வும் குற்றச் செயல்களில்தான் கழிகின்றது.

---------------------------

அல்பகரா. 179- வது வசனம். –1

( 371 / 7) – مجلة الجامعة الإسلامية بالمدينة المنورة –2

இது வெள்ளை நிரக் கழுகு தேசங்களின் குளிர்ச்சியான தகவல்கள். இவர்களின் மனித சட்டம்தான் இந்த நிலையை தோற்றுவித்தது . சவூதி அரேபியாவில் விரல் விட்டு எண்ணக் கூடிய அளவுதான் குற்றச் செயல்கள் பதிவு செய்யப்படுகின்றன என ஆய்வுகள் குறிப்பிடுகின்றன. வியப்பாக இருக்கின்றதா

**பகுத்தறிவிற்கும் இயல்பான மரபுகளுக்கும் பொருத்தமற்றது.**

பகுத்தறிவாளர்கள் என தம்மைப் பெருமைப்படும் மேற்கத்தையர்கள் மனிதனின் இயல்பான தன்மைகளைக் கூட இன்னும் புரிந்ததாகத் தெரியவில்லை. சுதந்திர, சமத்துவக் கோஷத்தால் மனித சந்திகளை உருவாக்கும் இளஞர், யுவதிகள் வாழ்வை சீரழித்துள்ளனர்.

இவர்கள் தமது மனோ இச்சையின் அடிப்படையில் அமைத்துக் கொண்ட சட்டங்களால் உலகில் குற்றச் செயல்கள் அதிகரிப்பதற்கு தாராளமாக களம் அமைத்துத் தந்துள்ளனர். சுருக்கமாகக் கூறுவதானால் நல்ல மானிடப் பண்புகளைப் புதைத்துவிட்டு, தீய பண்புகளுக்கு உயிரோட்டம் அழித்துள்ளனர்.

உலகில் ஜனநாயகப் பொர்வையில் மக்களை சீரழிக்கும் அமெரிக்காவின் தரம் பற்றி அறிந்து கொள்ள அமெரிக்கர்கள் சிலரது வாக்கு மூலம் இங்கு பதியப்படுகின்றது.

وقالت الدكتورة إيدايلين : ( إن سبب الأزمات العالمية في أمريكا وسر كثرة الجرائم في المجتمع هو أن الزوجة تركت بيتها لتضاعف دخل الأسرة فزاد الدخل وانخفض مستوى الأخلاق ثم قالت إن التجارب أثبتت أن عودة المرأة إلى الحريم هو الطريقة الوحيدة لإنقاذ الجيل الجديد من التدهور الذي يسير فيه

எடாய்லீன் என்ற பெண் கலாநிதி இவ்வாறு குறிப்பிடுகின்றார். அமெரிக்காவின் நெருக்கடிகளுக்குக்குரியகாரணமும், சமூகத்தில் குற்றச்ச செயல்கள் அதிகரிப்பதற்குரிய இரகசியமும் என்னவென்றால் மனைவி குடும்ப வருவாயை பெருக்கிக் கொள்வதற்காக தனது வீட்டை விட்டுவிட்டாள். வருவாய் அதிகரித்திருக்கிறது. மறுபுறத்தில் பண்பாட்டு வீழ்ச்சி ஏற்பட்டிருக்கின்றது. புதிய தலைமுறையினரை இவ்வாறான சீர்கேடுகளில் இருந்து காப்பாற்றுவதற்கான ஒரே வழி ஒரு பெண் தனக்குரிய கணவனுடன் இணைந்து வாழ்வதுதான் என்பதை அய்வுகள் உறுதி செய்துள்ளன என அவர் மேலும் சுட்டடிக்காட்டியுள்ளார்.

وقال أحد أعضاء الكونجرس الأمريكي : ( إن المرأة تستطيع أن تخدم الدولة حقا إ ذا بقيت في البيت الذي هو كيان الأسرة .

அமெரிக்க கோங்ரஸின் உறுப்பினர்களில் ஒருவர்: குடும்பத்தின் அடிநாதமாக விளங்கும் வீட்டில் ஒரு பெண் தங்கி இருப்பாளாயின் அவன் நாட்டுக்கு உண்மையாகவே சேவையாற்ற முடியும். என்றார்.

وقال عضو آخر : ( إن الله عندما منح المرأة ميزة الأولاد لم يطلب منها أن تتركهم لتعمل في الخارج بل جعل مهمتها البقاء في المنزل لرعاية هؤلاء الأطفال

மற்றொரு உறுப்பினர்: அல்லாஹ் பெண்ணுக்கு குழந்தைச் செல்வத்தின் சிறப்பம்சத்தை வழங்கி இருப்பது மூலம் அவள் வெளியில் சென்று பணி செய்வதை அவன் அவளிடம் வேண்டவில்லை . மாறாக, அவள் வீட்டில் தங்கி குழந்தைகளை வளர்ப்பதே அவளது பாரிய பணியாகும் எனக் குறிப்பிட்டுள்ளார். *(1)*

---

**1**) **عبد العزيز بن عبد الله بن باز**( **رحمه الله** التبرج وخطر مشاركة المرأة للرجل في ميدان عمله – (*1 / 34*)